# RAMBO IV



No more evil, injustice and crime will be tolerated in this city. The relentless crusader is here. With his famed Zap Gun (the three sound gizmo that's the terror of the underworld) and his fleet of rough 'n tough ready-for-action vehicles — Wrecker, Super Dumper and Fire Engine. And of course, his missile-firing Helicopter. So...breathe easy. The one man army is here.

**SAMMO**

Mechanical and electronic toys









**CHANDAMAMA TOYTRONIX**

In collaboration with Sammo Corporation, S.Korea

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, 188, NSK Salai, Vadapalani, Madras 600 026

Mudra M CTPL 4093

# பெரியவளா இருப்பதில் பெரிய குஷி
# சுதாவில் இருக்கு அற்புத ருசி !

சுதா ஸாஃப்ட் ட்ரிங்க்
கான்ஸன்ட்ரேட் இருந்தா எத்தனை
பெரிய குஷி தெரியுமா. அதன்
ஃப்ளேவர்ஸும் பெரிய ஜோர்-13
விதம் இருக்கு! ஒரு பேக்கிலே
32 கிளாஸ் நிறைய பானம்
கிடைக்கும். சுதா இருந்தால்
எத்தனை பெரிய குஷி
பார்த்தீங்களா.






'பெரிய' சின்னவர்களின் பெரிய விருப்பம்

# சுதா


விற்பனையாளர்கள் :
ஸார்டா ஃபுட்ஸ் அன்ட் ஃப்ளேவர்ஸ் நாஸிக்

ஸாஃப்ட் ட்ரிங்க் கான்ஸன்ட்ரேட்

everest/90/SFF/61-tm

**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956**

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA(Minor)<br>(Minor admitted to the benefits of Partnership)<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

*1st March 1991*

# பாரீஸ் மிட்டாய்கள் என்னென்ன?

இந்த படத்திலே 11 பாரிஸ் மிட்டாய்கள் இருக்கின்றன. அவற்றைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!




அந்த மிட்டாய்கள்: காபி பைட், காராமில்க், ட்ரை-மீ, லாக்டோ கிங், எலாய்ச்சு, மூன் ட்ராப், டாங்கோ, சாக்கலேட் எக்ளேர்ஸ், கோகோ நட் க்ரீம், சாக்கோ டாஃப் மற்றும் பிக்ஸீஸ்.

## செய்து பாருங்கள்

ஒரு கப் மைதா, 1/4 கப் உப்பு, 1/3 கப் தண்ணீர் இவற்றை நன்கு கலந்து


Fig.1

பிசைந்து கொள்ளவும். (படம் 1). விரல்களால் இந்த மாவை சிறு சிறு உருண்டைகளாகச் செய்யவும். (படம் 2). மாவு சரியாக இருக்க தண்ணீரையோ, மாவையோ சேர்க்கவும்.


Fig.2

இப்போது உங்கள் கற்பனைப் படி, பூனை, நாய் என பல உருவங்களையும் செய்யலாம். ப்ளாஸ்டிக் பையில் வைத்து ஃப்ரிஜ்ஜில் வைக்கவும். மீண்டும் தேவைப் படும்போது, எடுத்து, குளிர் விட்ட பிறகு உபயோகிக்கலாம்.


Fig.3

## தெப்பம் செய்வோமா?

இதைச் செய்யத் தேவை: கலர் தீட்டிய கார்ட் போர்ட், கத்தரிக் கோல், அக்ரோட்டு ஓடுகள், கூல் ட்ரிங்க் ஸ்ட்ரா அல்லது குச்சிகள், வெள்ளை பேப்பர், பசை அல்லது ஃபெவிகால் மற்றும் மேலே சொன்னது போல் மாவு.


Fig.1

செய்யும் முறை: 1. செவ்வக வடிவ கார்ட்போர்டில் நான்கு அக்ரோட்டு ஓடுகளை


Fig.2

ஒட்டுங்கள். (படம் 1). 2. வெள்ளை பேப்பரில் ஒரு பாய்மரம் வெட்டிக் கொள்ள வும். 3. கூல்ட்ரிங்க் ஸ்ட்ரா அல்லதுகுச்சியை பாய்மர காகிதத்தில் நுழைக்கவும். (படம் 2). 4. இந்த ஸ்ட்ரா அல்லது குச்சியை, கொஞ்சம் பிசைந்த மாவால் தெப்பத் துடன் இணைக்கவும். (படம் 3). இதோ, குளியல் தொட்டியிலோ, ஓடையிலோ இந்த தெப்பம் மிதக்கும்!


Fig.3

HTA 7713 C

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## முன்னேற்றத்தின் இரகசியம்

உலகில் ஒவ்வொரு நாட்டிற்கும் வரலாற்றில் ஒரு தனிப்பட்ட சிறப்பு உண்டு. எந்நாட்டு வரலாற்றையும் ஆராய்ந்து பார்த்தால் அதில் நல்லதையும் கெட்டதையும் காணலாம். மிக உயர்ந்த ஒளி மயமான நம் நாட்டு வரலாறும் இது போன்றதே.

நம்நாடு தற்போது ஜனநாயகப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது. பிற நாடுகளில் ஜனநாயகம் குலைந்து போன போதிலும் நம் நாட்டில் தலை தூக்கி நிற்கிறது. இது எவ்வளவோ மகிழ்ச்சியைத் தரும் விஷயமாகும்.

கருத்து வேறுபாடுகளை மதித்து வேற்றுமையில் ஒற்றுமையைக் காண்பதில்தான் ஜனநாயகம் தழைக்கும் இரகசியம் உள்ளது. பழக்க வழக்கங்களில் தமிழர்களுக்கும் பஞ்சாபியருக்கும் சம்பந்தம் இல்லை. வங்காளிகளுக்கும் பீஹாரிகளுக்கும் சம்பந்தம் இல்லை. இது போல ஒரு மாநிலத்திற்கும் மற்ற மாநிலத்திற்கும் உள்ள பல வேறுபாடுகளைக் காண முடியும். ஆயினும் மக்கள் அனைவரும் ஒன்றாகி எல்லா மாநிலங்களும் ஒன்று சேர்ந்து இருந்தால் பரந்த பாரத நாடு நிலைத்து இருக்கும். இந்தக் கூட்டமைப்பில் ஒரு மாநிலங்த்திற்கு உள்ள சில வசதிகள் வேறொரு மாநிலத்திற்கு இல்லாமல் போகக் கூடாது. ஒரு மாநிலத்தை விட மற்ற மாநிலம் உயர்ந்தது என்ற ஏண்ணம் கூட எழக் கூடாது. ஒருவேளை ஒரு சிலர் மனதில் இப்படிப்பட்ட எண்ணங்கள் தோன்றி இருந்தாலும் அவை அவர்களிடையே நிலைத்து விடக் கூடாது. அவற்றை உடனுக்குடனேயே அகற்றிவிட வேண்டும். அப்போதுதான் நாட்டின் ஒருமைப்பாடு நிலைத்து நிற்கும். இந்த ஒருமைப்பாட்டை ஒவ்வொருவரும் பாதுகாத்தால் நாட்டின் முன்னேற்றம் மிக விரைவில் ஏற்பட்டுவிடும்.


மதிமுகம்: 88 மார்ச் 1991 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 3-00 வருட சந்தா: ரூ. 36-00







# சுரிநாம் நிகழ்ச்சிகள்

ராம் சேவக் சங்கர் என்ற பெயரைக் கேட்டதும் அவர் ஒரு இந்தியர் எனக் கூறிவிடலாம் அல்லவா? சங்கர் சில தினங்களுக்கு முன்வரை சுரிநாமின் அதிபராக இருந்தவர். சுரிநாம் தென்அமெரிக்காவில் வடகிழக்குப் பகுதியில் உள்ள மிகச் சிறிய நாடு. இவ்வளவு தொலைவிலுள்ள ஒரு நாட்டிற்கு ஒரு இந்தியர் எப்படித் தலைவரானார் என்று திகைக்கிறீர்களா?

சுரிநாமின் மக்கட் தொகையில் மூன்றில் ஒரு பங்கு இந்தியர். நீக்ரோக்களும் மலடோலர்களும் சேர்ந்து மற்றொரு மூன்றில் ஒரு பங்கு. மீதமுள்ளவர்கள் மற்ற இனத்தவர். இவர்களிலே இந்தோனேசிய, ஹிந்தி, ஸரனும்டோங்கோ; ஜப்பானிய மொழிகள் வழக்கில் உள்ளன.

சுரிநாம் நெதர்லாண்டின் குடியேற்ற நாடாக இருந்தது. 1975ல் இந்நாடு சுதந்திரம் பெற்றது. இதன் மக்கட் தொகை நான்கு லட்சம் பரப்பளவு 1,63,820 ச. கி. மீ. இதன் தலைநகர் சாசாமாரிபோ. புகையிலையும் தாதுப் பொருள்களும் இங்கு நிறையக் கிடைக்கின்றன.

சுரிநாமிற்கும் இந்தியாவிற்கும் பண்டைக் காலத்திலிருந்தே தொடர்பு இருந்து வருகிறது. மெக்





பாவ்டர்ஸ்



ராம் சேவக் சங்கர்

சிகோ அரசாங்கம் வெளியிட்டுள்ள மெக்சிகோ வரலாற்றின்படி இந்தியாவிலிருந்து கிழக்கு திசையில் கடலில் சென்றவர்கள். முதன் முதலில் வட அமெரிக்காவை அடைந்தார்களாம்.

ஆனால் இப்போது சுரிநாமில் இருப்பவர்கள் எல்லாம் அங்கு போய்க் குடி ஏறினவர்களே. அரசாங்க நிர்வாகத்தில் உத்தியோகம் பார்ப்பவர்கள் பெரும்பாலோனோர் இந்தியர்களே. ராம் சேவக் சங்கரைப் போலவே ஜகன்நாத் லக்ஷ்மண் என்பவர் அந்நாட்டு தேசீய சபையின் தலைவர்.

ஜனநாயக நாடான சுரிநாம் நாடாளும் மன்றத்தில் 51 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். ஆயினும் இராணுவம் அந்நாட்டில் சக்தி வாய்ந்ததாகத் தென்படுகிறது, புதிய ஆண்டு தொடங்குவதற்குச் சில நாட்களுக்கு முன் ராம் சேவக் சங்கர் தம் பதவியைத் துறந்தார். கர்னல் பாவ்டர்ஸ் தலைமையில் நடந்த இராணுவப் புரட்சி காரணமாகவே சங்கர் பதவி விலக நேரிட்டது என்று தெரிகிறது. ஆனால் அவரது பதவி விலகலுக்கும் தனக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது என்று இராணுவம் கூறி வருகிறது. நிலைமை இன்னமும் தெளிவாகவில்லை. பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.



# நந்திகள் உள்ளன!

தர்மபாவன் என்ற மன்னன் மக்கள் மனம் மகிழ ஆண்டு வந்தான். அவனுக்கு மூன்று புதல்வர்கள் இருந்தனர். மூவருமே நாட்டின் மன்னனுக ஆசைப்படவே அவர்களுக்கு ஊக்கம் அளிக்க சிலர் எப்போதும் அவர்களைச் சுற்றி இருந்தனர். இதனுல் நாட்டில் மூன்று கோஷ்டிகள் ஏற்பட்டன.

இதைக் கண்ட மன்னன் மனம் புழுங்கி கொஞ்ச நாட்களாவது நிம்மதியாக இருக்கலாம் என எண்ணி ஆட்சிப் பொறுப்பைத் தன் பட்டத்து ராணியிடம் ஒப்படைத்து விட்டுக் காட்டிற்குச் சென்றுன். அங்கு ஓரிடத்தில் மகாதேவன் என்பவனைக் கண்டான். அவன் தன் மனைவி மக்களோடு அங்கேயே ஒரு குடிசை போட்டுக் கொண்டு வாழ்ந்து வந்தான்.

மன்னன் அவனிடம் "நீ இப்படித் தனியாக உன் குடும்பத்தவருடன் வாழ்கிருயே. உன் புதல்வர்களுக்கு நான்கு பேர்களுடன் கலந்து உறவாடும் வாய்ப்பே இல்லாது போகிறதே. இவர்களுக்குச் சமுகப் பழக்க வழக்கங்கள் தெரிய வேண்டாமா?" என்று கேட்டான்.

அதற்கு மகாதேவன் "நான் இந்த உறவுக்காரர்கள், நண்பர்கள் என்பவர்களையெல்லாம் அறவே வெறுப்பவன். எனவே நான் அவர்கள் தொடர்பே இல்லாத காட்டில் வந்து என் குடும்பத்தவருடன் வாழ்கிறேன். சமூகப் பழக்க வழக்கங்கள் என் புதல்வர்களுக்கும் புதல்விகளுக்கும் தெரியப்படுத்த நான் பல கதைகளை அவர்களுக்குக் கூறி வருகிறேன். அவற்றுல் அவர்கள் பயனடைந்து இங்கிருந்து போய் மக்களோடு சேர்ந்து வாழ முடியும். அப்படி அவர்களால்

—பாபநாசம் சாமா—



வாழ முடியவில்லை என்ருல் அவர்கள் திரும்பி வந்து இந்தக் காட்டு வாழ்க்கையையே மேற்கொள்ளலாம். ஏனெனில் இந்த வாழ்க்கைக்கு அவர்கள் பழக்கப்பட்டிருக்கிருர்கள்'' என்று கூறித்தான் எழுதி வைத்த கதைகளை எடுத்துக் கொடுத்தான்.

மன்னனும் அவற்றை எல்லாம் படித்துப் பார்த்து விட்டு ''ஆகா! எவ்வளவு நல்லகதைகள்! இவற்றைப் படித்தால் பல நீதிகளைத் தெரிந்து கொள்ளலாம். இவற்றைப் படித்த பின் என் மனம் தெளிவு பெற்றது. நீங்கள் எழுதிய கதைகள் எனக்கு மட்டும் அல்ல, சாதாரணக் குடிமகனுக்கும் நீதிகளைப் புகட்டக் கூடியவை. இப்படிப்பட்ட கதைகள் எழுதும் உங்கள் பணி நாட்டிற்குத் தேவை. எனவே நீங்கள் என் தர்பாருக்கு வந்து கொஞ்ச காலம் இருந்து மக்களை நல் வழிப்படுத்த வேண்டும்'' என வேண்டினுன்.

மகாதேவனும் அதைக் கேட்டுப் புன்னகைப் புரிந்து ''அரசே! தங்கள் மனம் மிகவும் குழம்பிப் போயிருந்திருக்கிறது. அதனுல் என் கதைகளை படித்ததும் தங்களது பிரச்னைகளுக்கு பதில்கள் கிடைத்து விட்டது போல் தெரிகிறது. என் கதைகள் தர்ம, நியாய சாஸ்திரங்களை அடிப்படையாகக் கொண்டவை அல்ல. இவற்ருல் மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடும் நான் எழுதவில்லை. ஏதோ என் மனத்திருப்திக்காகவே நான் எழுதினேன். உங்கள் வாயிலாக இவை மக்களிடையே பரவுமாளுல் அதனை என் மாபெரும் அதிர்ஷ்டம் எனக் கருதி மகிழ்வேன். ஆனுல் இன்னும் கொஞ்ச காலம் நான் சிலகதைகளை எழுத விரும்புகிறேன். அதனுல் என் விருப்பம் நிறைவேறியதும் தங்கள் தர்பாருக்கு வந்து தங்களை தரிசிக்கிறேன்'' எனப்பணிவுடன் கூறினுன்.

தர்மபாலனும் அப்படியே செய்யச் சொல்லி விட்டு அங்கிருந்து தலைநகருக்குத் திரும்பி வந்தான். இனி மேல் வம்ச பரம்பரை ஆட்சி இல்லை என அறிவித்து மக்களே

தேர்ந்தெடுக்கும் உறுப்பினர்களின் ஆட்சியை கொண்டு வருவதாக அவன் அறிவித்தான். அதனுல் மூன்று அரசகுமாரர்களின் கோஷ்டிகள் கலைந்து போயின. மக்களுக்குப் பணிபுரிவது எப்படி என்ற சிந்தனையில் எல்லோரும் ஆழ்ந்தார்கள்.

கொஞ்சகாலத்திற்குப் பின் மகாதேவன் தான் மன்னனுக்கு வாக்களித்தபடி அவனைக் காணக் காட்டிலிருந்து புறப்பட்டான். தன் மனைவி மக்களை அழைத்துக் கொண்டு கிளம்பிய அவன் வழியில் ஒரு ஊரின் சத்திரத்தில் தங்கினுன். அங்கு அவன் பாஸ்கரன் என்ற இளைஞனைச் சந்தித்தான்.




பாஸ்கரனும் மகாதேவனைப் பற்றி விசாரித்து அவன் மன்னனைக் காணச் செல்வதையும் தெரிந்து கொண்டான். அவன் மகாதேவனை வணங்கி "ஐயா! தங்களைச் சந்தித்தது என் பாக்கியமே. நானும் என் அனுபவங்களைக் கதைகளாக எழுதி வைத்திருக்கிறேன். இதுவரை நூறு கதைகளுக்கு மேல் எழுதி இருக்கிறேன். அவற்றைப் படித்து விட்டு நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டான்.

மகாதேவனும் அவன் கொடுத்த நூறு கதைகளையும் வாங்கிப் படித்து விட்டு "தம்பி! நான் எவ்வளவோ ஆண்டுகள் அனுபவப்பட்டபின் என் அனுபவங்களைக் கதைகளாக எழுதினேன். நீயோ இந்த இளம் வயதில் இவ்வளவு அற்புதமான கதைகளை எழுதி இருக்கிருயே. உன் போன்றவர்களுக்கு அரசாங்க ஆதரவு கிடைத்தால் அதனுல் மக்களுக்கு நன்மை ஏற்படும். அதனுல் உன்னைப் பற்றி நான் மன்னர் தர்மபாலரிடம் கூறுகிறேன்" என்ருன்.

அதைக் கேட்ட பாஸ்கரனும் மகிழ்ந்து "ஐயா! அரசாங்க ஆதரவு பெற வேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை. நான் என் மனம் திருப்தி அடைவதற்காகவே கதைகளை எழுதினேன். நீங்கள் என் கதைகளைப் படித்து அவற்றை பாராட்டியதைக் கண்டு நான் பெருமிதம் அடைகிறேன். இப்போது நான்




தங்களிடம் கொடுத்த கதைகளை விட மிகவும் உயர்ந்தது என நான் கருதும் ஒரு கதையைக் கொடுக்கிறேன். அதையும் படித்து விட்டுத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டும்'' எனக் கேட்டுக் கொண்டான்.

மகாதேவனும் அந்தக் கதையை அவனிடமிருந்து வாங்கிப்படித்து விட்டு ''தம்பீ! இந்தக்கதை ஒரே குழப்பமாக எனக்கு இருக்கிறதே. சரியாகப் புரியவில்லை. நீ கொஞ்சம் விளக்கிக் கூறுகிறாயா?'' என்றான்.

அதைக் கேட்ட பாஸ்கரன் திடுக்கிட்டு ''உங்களுக்கு இந்தக் கதை பிடிக்கவில்லை என்றால் அதை தாராளமாகத் தயக்கமில்லாமல் கூறி விடுங்கள்'' என்றான்.

மகாதேவனும் ''உன் கதை எனக்குப் பிடிக்கவில்லை என்று கூறவில்லையே. நான் உன் மற்ற கதைகளைப் புரிந்து கொண்டது போல இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதனால் தான் இதனை விளக்கிக் கூறும் படிக் கேட்டேன்'' என்றான்.

''நீங்கள் என்னைக் கேலி செய்கிறீர்கள். உங்களுக்குக் புரியாத இந்தக் கதை எப்படி உயர்ந்தது எனக் கொள்ள முடியும்?'' என்று பாஸ்கரன் கேட்க மகாதேவனும் ''நான் உன் நூற்றியொன்று கதைகளைப் படித்து அவற்றில் நூறைப் புரிந்து கொண்டேன். ஒன்று புரியாமல் போகவே நீ என்னருகில் இருந்ததால் அதை விளக்கும் படி கேட்டேன். உன் நூறு கதைகள் எனக்குப் பிடிக்காது போயிருந்தால் இவ்வாறு கேட்டிருக்க மாட்டேன். நீ எந்த நோக்கத்தில் இந்தக் கதையை எழுதினாய் என்று சொல்'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட பாஸ்கரன் ''எந்த ஒரு கதையும் நீதியைத் தான் புகட்ட வேண்டுமா? நீதியைப் புகட்டாத கதை நல்ல கதை இல்லையா? நான் மக்களுக்கு அறிவுரை புகட்டக் கதைகளை எழுதவில்லை. என் அனுபவங்களை நான் கதைகள் வாயிலாகப் பிறருடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்'' என்றான்.

மகாதேவனும் "நான் இந்தக் கதையின் நீதி என்ன என்று கேட்க வில்லையே. இதை நீ எந்த நோக்கத்தோடு எழுதினாய் என்றுதானே கேட்டேன். நீதி இல்லாது போனாலும் எந்தக் கதையும் ஏதோ ஒரு நோக்கத்தோடு தான் எழுதப்படும். நீதிக்கதை கூட உயர்ந்ததாக இல்லாது போகலாம் என்ற அபிப்பிராயமும் எனக்கு உண்டு. கிருஷ்ண லீலைகள் பற்றியுள்ள சில கதைகளை இதற்கு உதாரணமாகக் கூறலாம்" என்றான்.

அப்போது பாஸ்கரன் "ஆம் இக்கதையும் ஒரு நோக்கத்தோடு தான் எழுதப்பட்டது" எனக்கூறிக் கதையை விளக்கலானான். ஒரு ஆலய நிர்மாணத்தில் பல சிற்பிகள் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களில் இளைஞனான ஒரு சிற்பி தயாரித்த சிற்பங்கள் மிக அற்புதமாக விளங்கின. ஆனால் தலைமை சிற்பியோ அவை நன்றாக இல்லை என்று கூறி யார் கண்ணிலும் படாதபடி மறைத்து வைத்தான். இதனால் மனம் ஒடிந்து போய் அந்த இளம் சிற்பி தன் சிற்பங்களை உடைத்து எறிந்து விட்டு வாழ்க்கையில் வெறுப்படைந்து எங்கோ போய் விட்டான்.

இக்கதையை பாஸ்கரன் கூறி "நான் என் கதையை விளக்கி விட்டேன். இப்போது உங்கள் அபிப்பிராயத்தைக் கூறுங்கள்" என்றான்.



மகாதேவனும் "இந்த விளக்கத்தை முன்பே நீ கூறி இருந்தால் நாம் இது பற்றி இவ்வளவு விவாதித்திருக்க மாட்டோம். சரி இனி இக்கதையைப் பற்றி அபிப்பிராயம் கூற மாட்டேன். ஏனெனில் எனக்கு என் நடுநிலைமை மீது இருந்த நம்பிக்கை போய் விட்டது" என்றான்.

அதன் பிறகு மகாதேவன் தன் குடும்பத்தவருடன் அவ்வூரிலிருந்து கிளம்பித் தலைநகரைப் போய்ச் சேர்ந்தான். அவன் மன்னனைக் கண்டு "அரசே! தங்கள் நாட்டிலுள்ள பண்டிதர்கள் கர்வம் பிடித்தவர்கள், தான் என்ற அகம்பாவம் கொண்டவர்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. இலக்கியத்திற்கு

இது மாபெரும் களங்கத்தை ஏற்படுத்துவதாகும்'' எனக்கூறி பாஸ்கரனைத் தான் சந்தித்தது பற்றிக் கூறினான்.

இதைக் கேட்ட தர்மபாலன் ''அந்த பாஸ்கரன் ஒன்றும் பெரிய பண்டிதனாக இருக்க மாட்டான். அவனைப் பற்றி நான் கேள்விப் பட்டதும் இல்லை. அப்படிப்பட்டவனின் அனுபவத்தை அளவு கோலாகக் கொண்டு என் நாட்டிலுள்ள பண்டிதர்களைக் குறை கூறுவது சரியல்ல'' என்றான்.

மகாதேவனும் சிரித்தவாறே ''அரசே! நல்ல கதைகளைப் படைத்த பாஸ்கரனைப் பற்றி நீங்கள் அறிய முடியவில்லை என்றால் அது வருந்தத்தக்கதே. இப்படிப் பட்ட படைப்பாளிகளைத் தாங்கள் கட்டாயம் தெரிந்து வைத்திருக்க வேண்டும். நான் அவனது கதைகள் உயர்ந்தவை எனப் பாராட்டி அவனிடம் கூறினேன். அப்போது அவன் நான் கேலியாக அவ்விதம் கூறுவதாக எண்ணி விட்டான். நான் அரசாங்க ஆதரவு பெற்று உயர் பதவி பெறப்போகிறவன் என அவன் கருதுகிறான். உயர்பதவியில் உள்ளவர்கள் எல்லாம் அவனைக் கேலி செய்கிறார்கள். யாரும் பாராட்டிப் புகழ்வது இல்லை என்பது அவன் அபிப்பிராயம். அதற்குக் காரணம் நாட்டில் புகழ்பெற்ற பண்டிதர்கள் பொறாமை காரணமாக பாஸ்கரனைப் போன்றவர்களைத் தலை எடுக்க விடாமல் செய்வதேயாகும். எனவே பாஸ்கரனைப் போன்றவர்களை நீங்கள் அடையாளம் கண்டு கொண்டு அவர்களுக்கு ஆதரவு அளித்தால் இலக்கியம் தழைத்து ஓங்கி வளர்ச்சி அடையும்'' என்றான்.

தர்மபாலனும் மகாதேவன் கூறியதிலுள்ள உண்மையை உணர்ந்து பாஸ்கரனைப் போன்றவர்களைக் கண்டு கொள்ளத் தக்க வழிமுறைகளைப் வகுத்து நல்ல பேரும் புகழும் பெற்றான்.






**18**

*[வீரசிம்மன் நினைத்தது எதுவுமே நடக்கவில்லை. ஜெயபுரத்திலிருந்து கவர்ந்து வந்த தங்கவிக்கிரகம் வழியில் மாயமாய் மறைந்தது. ஜெயபுரத்திலிருந்து அழைத்து வரப் பட்ட இளவரசி தப்பி விட்டாள். அரண்மனையில் கிடைத்த ஆபரணங்களை வேஷதாரிகளான வியாபாரிகள் கவர்ந்து சென்றார்கள். பிறகு—]*

அமரபுர மன்னன் சத்தியசேனன் வசந்தனிடம் "என் பேரனைக் காண ஆசையாக இருக்கிறது" என்றான். வசந்தனோ "இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுமையாக இருங்கள். தன் நாட்டை வீரசிம்மனிடமிருந்து மீட்ட பிறகே தங்களைக் காணப் போவதாக இளவரசர் தீபன் சபதம் செய்திருக்கிறார். மேலும் வீரசிம்மனை எதிர்க்கும் அளவிற்கு நாங்கள் படை திரட்ட உதவி வருவதும் தாங்கள் தாமே! எனவே விரைவிலேயே நல்ல முடிவு ஏற்படும்" என்றான்.

சத்தியசேனனும் "வசந்தா! தீபனை நினைத்து நான் பெருமைப் படுகிறேன். சாந்திபுரத்தை மீட்க அவனும் நீயும் எவ்வளவு பாடுபடுகிறீர்கள்? இதற்கு உதவுவது என் கடமையாயிற்றே" என்றான்.



வசந்தனும் "தங்களது ஆதரவில் எங்கள் பலத்தைப் பெருக்கி வருகிறோம். தங்களது இராணுவ அதிகாரிகள் எங்களுக்குத் தக்க பயிற்சியை அளித்தும் வந்திருக்கிறார்கள். இதுதான் வீரசிம்மனுடன் நாங்கள் நடத்துகிற கடைசிப் போர். இதற்கும் உங்களது படைகளின் உதவி தேவையே" என்றான்.

சத்தியசேனனும் உடனே மந்திரியையும் சேனாதிபதியையும் அழைத்து வரச் சொன்னான். அவர்கள் வந்தபின் அவனும் வசந்தனும் சேர்ந்து மேற்கொண்டு நடக்க வேண்டியதற்கான திட்டங்களை வகுக்கலானார்கள்.

வீரசிம்மன் கவலையோடு யோசனை செய்து கொண்டிருந்தபோது ஒற்றன் ஒருவன் வந்து "அரசே! மறுபடியும் ஒரு அதிசயம் நடந்து விட்டது. குரங்காக மாறிய இளவரசி மீண்டும் இளவரசியாக மாறிவிட்டாள்" என்றான்.

அதைக்கேட்ட வீரசிம்மன் ஆச்சரியத்துடன் "அப்படியா! இப்போது அவள் எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டான். ஒற்றனும் "ஜெயபுரத்தில் தன் தந்தையுடன்தான் அவள் இருக்கிறாள்" என்றான்.

வீரசிம்மனும் "அப்படியா? ஜெயபுர மன்னன் ஏன் இன்னமும் இந்தத் தகவலை நமக்குத் தெரியப்படுத்தவில்லை?" என்று கோபத்தோடு கூறினான். பிறகு சற்று நேரம் யோசித்து விட்டு ஒரு அதிகாரியைக் கூப்பிட்டு "ஜெயபுர மன்னனோடு கடுமையாக நாம் நடந்து கொள்ளக்கூடாது. ஏனெனில் விரைவில் அவனது மகளை நான்தானே மணக்கப் போகிறவன். எனவே நீ ஜெயபுரத்திற்குப் போய் நானே அங்கு வந்து இளவரசி சுகன்யாவை அழைத்து வந்து மணம் புரிந்து கொள்ளப் போவதாக சங்கரவர்ம மன்னனிடம் தெரிவி. இம்முறை இளவரசியை அழைத்து வருகையில் நான் அவளை விட்டு ஒரு நொடிகூடப் பிரியாமல் இருப்பேன் எனவும், என்னுடன் எப்போதும் இந்த மந்திரவாதி இருப்பார் என்பதையும் கூறு" எனச்

சொல்லித் தன்னருகே நின்ற ஒரு தாடிக்கார மனிதனேச் சுட்டிக் காட்டினுன்.

அந்த அதிகாரியும் வீரசிம்ம னின் கட்டளேபடி ஜெயபுரத்திற் குப் போய் சங்கரவர்மனேப் பார்த்து விட்டு திரும்பி வந்தான். அவன் வீரசிம்மன் முன் தலேகுனிந்தவாறு நின்று "அரசே! நமக்குப் பெருத்த அவமானம் ஏற்பட்டுவிட்டது. என் னேயும், என்னேத் தூது அனுப்பிய தங்களேயும் படுமோசமாகப் பேசி அவமதித்து விட்டார் அந்த ஜெய புர மன்னர்" என்முன்.

அதுகேட்டு வீரசிம்மன் துள்ளி எழுந்து "ஆ என்னேயா அந்த ஜெய புரத்தான் அவமதித்தான்? அவன் அப்படி என்ன சொன்னுன்? தர் பாரில் என்ன நடந்தது? விவர மாகச் சொல்" என்று ஆத்திரத் துடன் கேட்டான்.

அந்த அதிகாரியும் "முதலில் ஜெயபுர மன்னர் என்னேக் காணவே மறுத்து விட்டார். அவர் கூறிய தாக ஒரு வாலிபன் வந்து தங்களே வாய்க்கு வந்தபடி திட்டி என்னேத் திரும்பிப் பாராமல் ஓடும்படிக் கூறினுன்." என்முன்.

வீரசிம்மன் கோபாவேசத்தோடு "என்னேயா கண்டபடி திட்டினுன்? யார் அவன்? என்ன திட்டினுன்?" என்று கேட்டான். அந்த அதிகாரி யும் "அந்த வாலிபன் ஜெயபுர மன்னனின் அந்தரங்க ஆலோசனே



யாளனும். அவன் தங்களேக் குரங்கு என்முன். குரங்கான தங்களிடம் இளவரசி சிக்காமல் தப்பி வந்த தோடு இளவரசிதான் ஒரு குரங் குக் குட்டியை ஏவித் தங்கள் முகத் தைக் கீறச் செய்தாள் என்றும் சொன்னுன். எனவே குரங்கான தங்களுடனே அல்லது தங்கள் தூத னுகச் சென்ற என்னுடனே ஜெய புர மன்னர் எதுவும் பேச விரும்ப வில்லே என்பதை அந்த வாலிபன் தெரிவித்தான் அதனுல் நான் தர்பாருக்குள் போகவும் முடிய வில்லே. மன்னரைக் காணவும் இயலவில்லே." என்முன்.

அதைக்கேட்ட வீரசிம்மன் "ஓஹோ! ஜெயபுரத்தானுக்கு அவ் வளவு கொழுப்பா! இப்போதே



அவனது நாட்டைப் பாழாக்கு கிறேன். சுகன்யாவிற்கு இருக்க இடமில்லாமல் செய்கிறேன். ஜெய புரத்து மக்களைக் கண்டதுண்டமாக வெட்டித் தள்ளுகிறேன். அவர் களது வீடுகளைத் தரைமட்டமாக்கு கிறேன். எல்லாவற்றையும் பொசுக் கிச் சாம்பலாக்கி விடுகிறேன் பார்'' என்று வெறிபிடித்தவன் போலக் கத்தினுன்.

அந்த அதிகாரியும் ''ஆமாம். தங்களை அவமதித்த அந்த மன்ன னுக்குத் தக்க பாடத்தைக் கற்பிக் கவே வேண்டும்'' என்முன். வீர சிம்மனும் உடனே சர்ப்பதந்தனை அழைத்து வரச் சொன்னுன். சர்ப்பதந்தன் வந்ததும் அவனிடம் வீரசிம்மன் ''இப்போதே நாம் ஜெயபுரத்தின் மீத படை எடுத்துச் செல்ல வேண்டும். படைகளைத் தயார் செய். நானே தலைமை தாங்கி அவற்றை நடத்திச் செல் லப் போகிறேன்'' என்முன். சர்ப்ப தந்தனும் அவ்விதமே செய்வதாகக் கூறினுன்.

அவன் மேலும் ''உங்கள் சிற் றரசன் ஜெயபுர மன்னன். அவன் துள்ளுகிமுன் என்முல் அவன் வாலை ஒட்ட நறுக்க வேண்டும். நம் படைகள் அதனைச் செய்யக் காத்துக் கொண்டிருக்கின்றன'' என்முன். அவன் ஜெயபுரத்திற்கு உதவ அமரபுர மன்னன் வருவான் எனச் சற்றும் நினைக்கக்கூடவில்லை.

ஆனுல் சர்ப்பதந்தன் போன பிறகு வீரசிம்மன் யோசித்தபோது அந்த விஷயம் அவனது நினைவிற்கு வந்தது. அவன் தன்னருகே இருந்த மந்திரவாதியிடம் ''நம் படை வீரர்களுக்கு எவரையும் எதிர்க்கும் சக்தி வரும்படிச் செய்ய ஏதாவது மந்திரம் உள்ளதா? அவர்கள் திடீ ரென்று சக்திபெறும்படித் தங்கள் மந்திர சக்தியால் ஏதாவது செய்ய முடியுமா?'' என்று கேட்டான்.

மந்திரவாதியும் ''இல்லாமல் என்ன பிரபுவே! வீரர்களுக்கு மட்டுமா? அவர்கள் ஏறி அமரும் குதிரைகளுக்கும்கூட அவ்விதச் சக்தி வரும்படிச் செய்யலாம். நான் மந்திரித்து ஒரு சூர்ணம் கொடுக் கிறேன். அதனைக் குதிரைகளுக்குக்

கொடுக்கும் தீவனத்தில் கலந்து வைத்தால் அவை அதிக பலம் பெற்று எதிரிகளை உதைத்துக் கொன்று விடும்'' என்றான். தன் தாடியை உருவிக் கொண்டே.

வீரசிம்மனும் ''சபாஷ்! அப்படியே செய்யலாம். அந்தச் சூர்ணத்தைப் பெரும் அளவில் தயாரித்து மந்திரித்துக் கொடு. நீ கூறியபடி அதனைக் குதிரைகளின் தீவனத்தில் கலந்து கொடுக்கும்படிச் செய்கிறேன்'' என்றான்.

உச்சி வேளைக்குள் படைகள் தயாராக நின்றன. மந்திரவாதியும் சர்ப்பதந்தனும் உடன் செல்ல வீரசிம்மன் அவற்றை நடத்திக் கொண்டு ஜெயபுரத்தை நோக்கிச் சென்றான். மாலையாகும்போது அவர்கள் ஜெயபுரத்தின் எல்லையை அடைந்து விட்டார்கள்.

அப்போது மந்திரவாதி ''பிரபுவே! நாம் இன்றிரவு இங்கேயே தங்கி விடலாம். சூர்ணத்தைத் தீவனத்தில் கலந்து இப்போது கொடுத்துவிட்டால் அது வேலை செய்ய ஆரம்பிக்கும். நாளைக் காலையானதும் ஒவ்வொரு குதிரைக்கும் பத்து குதிரைகளின் பலம் வந்து விடும்'' என்றான்.

வீரசிம்மனும் ''ஆ! அப்படியே செய்யலாம். விடியும் வேளைக்கு இங்கிருந்து கிளம்பலாம்'' என்றான். அப்போதே மந்திரவாதி பெரிய பாத்திரத்தில் சூர்ணத்தை வைத்து



மந்திரங்களை வெகு நேரம் ஜெபித்தான். பிறகு அந்தச் சூர்ணத்தைக் குதிரைகளின் தீவனத்தில் கலக்க வைத்து அவற்றை தின்னும்படி செய்தனர்.

விடியும் வேளைக்கு வீரசிம்மன் தான் குதிரைமீதமர்ந்ததும் மற்ற குதிரை வீரர்களைத் தன் பின்னால் வரச் சொல்லியும் ஜெயபுரத்தை அணுகினான். மந்திரவாதியும் குதிரைகளுக்கு பத்து மடங்கு பலம் வந்து விட்டதாகக் கூறி அவனுக்கு உற்சாக மூட்டினான்.

ஆனால் கொஞ்ச தூரம் போனதும் வீரசிம்மனின் குதிரையே இடக்கு செய்தது. முன்னே செல்லவில்லை. அதன் துள்ளலை வீரசிம்மனால் அடக்க முடியவில்லை. மந்திர



வாதியின் சக்தியால் குதிரைக்கு அதிக பலம் வந்து அது அவ்வாறு செய்வதாக அவன் நினைத்தான். அவன் கோட்டையை அணுகி விட்டபோதிலும் குதிரை முன்னே செல்லாமல் தன் பின்னங்கால் களை உயர்த்தி பயங்கரமாகக் கனைத் தது. அதனால் வீரசிம்மன் நிலைதடு மாறிக் கீழே விழலானான்.

அதுபோல அவனது குதிரை மட்டுமல்ல மற்ற எல்லாக் குதிரை களுமே தம் பின்னங்கால்களை உயர்த்தித் தம்மீது இருந்த வீரர் களைக் கீழே தள்ளின. சிலர் கீழே விழுந்தார்கள். வேறு சிலர் குதிரை களின் சேணங்களில் தலைகீழாகத் தொங்கினார்கள்.

அப்போது வீரசிம்மன் "சர்ப்ப தந்தா! என்ன இது? மந்திரவாதி என்ன செய்து தொலைத்தான்?" என்று கோபமும் ஆத்திரமும் பொங்கக் கேட்டான். அப்போது ஒரு குரல் "அடே மதிகெட்ட மடையா! இங்கே பார்" எனக் கம்பீரமாக ஒலித்தது. வீரசிம்மன் குரல் வந்த திசையில் தலை நிமிர்ந்து பார்த்தான்.

கோட்டை மதில் மீது அவனோடு வந்த மந்திரவாதி நின்று கொண் டிருந்தான். அவன் தன் பொய்த் தாடியையும் தலைச்சடைகளையும் பிய்த்து எறிந்தவாறே "என்னை யாரென்று தெரிகிறதா?" என்று கேட்டவாறே அட்டகாசமாகச் சிரித்தான்.

"ஆ! பழைய கிழமந்திரி!" எனக் கூவினான் வீரசிம்மன். "என்ன மோசடி வேலை இது? மந்திரவாதியாக வந்தது நீதானா? என்ன துணிச்சல் உனக்கு வேஷம் போட்டுவந்து என்னை ஏமாற்றி விட்டாயா?" என்று பற்களை நற நறவெனக் கடித்தவாறே கூறினான் அவன்.

மந்திரியும் "ஆம். ராஜ விசு வாசம் கொண்ட அதே கிழமந்திரி தான் நான். உன்னை நன்றாக ஏமாற்றி விட்டேன். ஆனால் நீ செய்த துரோகத்தை நினைத்துப் பார். மரியாதையாக இப்போதே ஆயுதங்களைக் கீழே எறிந்துவிட்டு தோல்வியை ஒப்புக் கொண்டு

சரணடைந்து விடு. இல்லாவிட்டால் நீயும் உன் படை வீரர்களும் உயிர் தப்ப முடியாது'' என்றான்.

அப்போது வீரசிம்மன் ''அடே கிழப்பயலே! நீயும் உன் சங்கரவர்மனின் படைகளும் என் படைகளின் முன் நிற்க முடியுமா?'' என்று கேலியாகச் சிரித்துக் கேட்டான். கிழமந்திரியும் ''அட அடி முட்டாளே! கொஞ்சம் திரும்பிப் பார்! பிறகு பேசு'' என்றான்.

வீரசிம்மன் பார்த்தபோது அவனது வீரர்களுக்குப் பின்னால் அமரபுர வீரர்கள் நிற்பதைக் கண்டான். முன்னால் திரும்பியதும் கோட்டை மீதும் ஆயிரக்கணக்கில் அமரபுர வீரர்கள் நிற்பதைப் பார்த்தான்.

அப்போது கிழமந்திரியின் பக்கம் சங்கரவர்மன் வந்து நின்று ''அடே வீரசிம்மா! வீணாக வீரர்களை நீ பலி கொடுக்க வேண்டாம் என்றே இவ்வாறு செய்து உன்னை இங்கேவரச் செய்தோம். இதெல்லாம் சாந்திதேவ மன்னரின் மகன் இளவரசன் தீபன் தீட்டிய திட்டம். மரியாதையாகச் சரணடைந்து விடு. அதனால் உயிர்ச் சேதத்தைத் தவிர்க்கலாம். இப்போது சாந்திபுரத்திலும் அமரபுரிப் படைகள் நுழைந்து விட்டன. உன் அரண்மனை இப்போது உன்வசம் இல்லை என்பதையும் புரட்சித் தலைவன் வசந்தன் வசம் உள்ளது என்பதையும் தெரிந்து கொள்'' என்றான்.



வீரசிம்மன் சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். அவனது வீரர்கள் பரிதாப நிலையில் இருந்தார்கள். அப்போது சங்கரவர்மன் ''சாந்திபுர வீரர்களே! இதோ பாருங்கள். இங்கு நிற்கும் இந்த இளைஞர் தாம் இளவரசர் தீபன். உங்கள் மன்னர் சாந்திதேவரின் மகன். நாட்டின் அரசர்'' என்று தன்னருகே தீபனை வரச் சொல்லி யாவருக்கும் அறிமுகப்படுத்தினான். அப்போது ''இளவரசர் தீபன் வாழ்க! வாழ்க!'' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன.

அப்போது சங்கரவர்மன் ''சபாஷ்! சாந்திபுர வீரர்களே! நீங்கள் தோல்வியை ஒப்புக் கொண்டு விட்டீர்கள். உங்கள்

ஆயுதங்களைக் கீழே போடுங்கள். பிறகு ஒரு பக்கமாக வந்து நில்லுங்கள். உங்களை தீபன் மன்னிப்பதோடு மீண்டும் தம் படையிலேயே இருக்கச் செய்வார்'' என்றான்.

வீரசிம்மன் யோசித்து பதில் சொல்வதற்குள் அவனது குதிரையே பயங்கரமாகக் கனைத்து அவனைத் தன் முன்னங்கால்களால் உதைத்துத் தள்ளிச் சற்று தூரத்தில் போய்விழச் செய்தது. சங்கரவர்மனின் வீரர்கள் அவனைப் பிடித்துக் கொண்டு போய்ச் சிறையில் அடைத்தார்கள். அவனோடு சர்ப்பதந்தனும் கைது செய்யப்பட்டுச் சிறைக்குள் தள்ளப்பட்டான்.

இளவரசன் தீபனைக் கண்டு அவனது தாத்தாவான அமரபுர மன்னன் மகிழ்ந்து போனான். வீரசிம்மனின் கொடுங்கோலாட்சி ஒழிந்தது கண்டு சாந்திபுர மக்கள் சந்தோஷப்பட்டார்கள்.

ஜெயானந்த முனிவரின் முன்னிலையில் சாந்திபுரத்தில் தீபனின் பட்டாபிஷேகம் நடந்தது. தீபனும் தன் பரிவாரங்கள் புடைசூழக் காட்டிற்குப் போய்த் தன் தாய் தந்தையரின் சமாதிகளுக்கு மரியாதை செலுத்தினான். அவர்களுக்கு நினைவாலயம் நிறுவவும் அவன் தக்க ஏற்பாடுகளைச் செய்தான்.

இதற்குப் பிறகு தீபனுக்கும் சுகன்யாவிற்கும் சிறந்த முறையில் விவாகம் நடைபெற்றது. நாளாவட்டத்தில் தீபன் அமரபுரிக்கும் ஜெயபுரத்திற்கும் மன்னனாகி மாபெரும் சாம்ராஜ்யத்தையே உருவாக்கினான்.

தீபன் மன்னனாகவும் சுகன்யா பட்டத்து ராணியாகவும் நீண்ட காலம் வாழ்ந்து மக்கள் நலம்பெற ஆட்சி புரிந்தார்கள்.

**(முடிவுற்றது)**






# வீரசேனன் கதை!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த பயங்கர இரவில் இப்படி ஒரு துணிகரச் செயலை செய்ய நீ முயல்வதால் மாபெரும் வீரன் நீ எனவே எண்ண வேண்டி உள்ளது. ஆனால் மாவீரனும் தன் தவறான செயலால் தன் மதிப்பையும் இழக்க நேரிடுகிறது. இதனை விளக்க வீரசேனன் என்பவனைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

விஜயபுர நாட்டில் கபிலபுரம் என்ற கிராமத்தில் வீரசேனன் என்ற

## வேதாளம் சொல்லும் கதை



வாலிபன் இருந்தான். அவன் அனாதை. சிறு வயதில் ஊர் தயவில் வாழ்ந்தான். வாலிபனானதும் அவன் தன் உழைப்பைக் கொண்டே வாழ்ந்து வரலானான்.

வீரசேனன் மிகவும் துணிச்சல் கொண்டவன். உடல் பலமும் உடையவன். ஒரே அடியில் பத்து பேர்களை அடித்து வீழ்த்தி விடுவான். ஒருமுறை அவனது ஊரருகே இருந்த காட்டிலிருந்து ஒரு புலி வந்து அந்த ஊரில் பலரைக் கொன்று காட்டிற்குள் இழுத்துப் போனது.

மன்னனிடம் அந்தப் புலி பற்றிக் கூறி அதனைக் கொல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அவ்வூரார் நினைத்தார்கள். ஒரு நாள் மத்தியான வேளையில் வீரசேனன் காட்டிற்குள் போனான். அப்போது ஒரு பெண் வேகமாக ஓடி வருவதை அவன் கண்டான். அவள் பின்னால் ஒரு புலி வந்து கொண்டிருந்தது.

இதைப் பார்த்த வீரசேனன் ஓடி வரும் புலியைத் தன் கோடாலியால் ஓங்கி அடித்தான். புலி கோபம் கொண்டு பெண்ணை விட்டுவிட்டு வீரசேனன் மீது பாய்ந்தது. அதற்குள் வீரசேனன் மேலும் இரண்டு அடிகளைக் கொடுத்துப் புலியை அடித்து வீழ்த்தினான். புலி இறந்து வீழ்ந்தது. புலி தாக்கிக் கீறிய காயங்களுடன் ரத்தம் சிந்த வீரசேனன் ஊர் திரும்பினான். ஊரார் அவனைப் பாராட்டி, தக்க சிகிச்சையும் அளித்து குணப்படுத்தினார்கள்.

வீரசேனனின் பலத்தையும் துணிச்சலையும் கேள்விப் பட்ட அந்நாட்டு மன்னன் அவனை வரவழைத்து தன் தர்பாரின் காவலாளியாக நியமித்தான். சிலநாட்களுக்குப் பின் சமரபுரி மன்னன் விஜயபுரத்தின் மீது திடீரெனப் படை எடுத்து வந்தான். போர்க்களத்தில் இருதரப்பினரிடையே பயங்கரத் தாக்குதல் நடந்தது. ஓரிடத்தில் மன்னர்கள் இருவரும் வாட்போர் புரிந்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு வீரன் வீசிய ஈட்டி விஜயபுரி மன்னனைத் தாக்கவே அவன் கீழே விழுந்து விட்

டான். சமரபுரி மன்னன் தன் வாளை எடுத்து விஜயபுரி மன்னனின் தலையை வெட்டப் போனான்.

இச் சமயத்தில் வீரசேனன் மின்னல் போலப் பாயந்து ஒரே அடியில் சமரபுர மன்னனின் வாளை வெகுதூரத்தில் போய் விழச் செய்தான். தன் கத்தியை அவனது மார்பிற்கு மேல் வைத்து "மன்னா! தோல்வியை ஒப்புக் கொள்" என்றான்.

சமரபுரி மன்னன் தோற்றதைக் கண்ட அவனது படை பின் வாங்கி ஓடியது. விஜயபுரி மன்னன் அவனைச் சிறைப்படுத்தினான். போரும் முடிவுற்றது. போர்க்கலையைக் கற்றிராத வீரசேனன் போர்களத்தில் துணிச்சலுடன் சமரபுரி மன்னனைத் தாக்கி வீழ்த்தி, தனக்கு வெற்றி கிடைக்கச் செய்ததற்கு விஜயபுர மன்னன் அவனை வெகுவாகப் பாராட்டினான். அவனுக்கு விலையுயர்ந்த பல பொருள்களைப் பரிசாகவும் அளித்தான்.

ஆனால் வீரசேனன் அவற்றை ஏற்காமல் "அரசே! ஒரு வீரனின் கடமை தன் உயிரைக் கொடுத்தாவது போரில் தன் மன்னனைக் காப்பதே. அதைத்தான் நான் செய்தேன்" என்றான். விஜயபுர மன்னன் அவனது ராஜவிசுவாசத்தைப் பாராட்டினான். அவன் முறைப்படி போர்கலைகளைக் கற்க ஏற்பாடு செய்தான். அவன் அவற்றில் நன்கு தேர்ச்சி பெற்றதும் மன்னன் அவனைத் தன் மெய்க் காவலாளியாக நியமித்தான்.



அந்நாட்டில் இரண்டு ஆண்டுகளாக மழையே பெய்யவில்லை. அதனால் நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மன்னனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அப்போது நவமணி என்ற சோதிடன் மன்னனைக் கண்டு "அரசே! இந்நாட்டின் தெற்கே பழைமைமிக்க ஒரு காளிகோயில் உள்ளது. அதில் ஒரு சாசனம் உள்ளது. அதன்படி யாராவது ஒருவன் எதையும் வேண்டித் தன் உயிரைத் தியாகம் செய்யத் தயாரானால் அவனது விருப்பம் உடனே நிறைவேறும் என்று எழுதப்பட்டுள்ளது. ஆனால் அப்படி உயிர்விட முன் வருபவன் பலசாலியாகவும் துணிச்சல்மிக்க



வனாகவும் இருக்க வேண்டும் என்றும் எழுதப்பட்டுள்ளது. இதனைத் தாங்கள் பயன்படுத்த ஏதாவது வழி செய்து பாருங்கள்'' என்றான்.

சோதிடன் கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த வீரசேனன் "அரசே! நான் என் உயிரைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன். நான் போய் அந்தக் காளிதேவியிடம் நம் நாட்டில் நல்ல மழை பெய்ய வேண்டும் என்பதே என் விருப்பம் என்று வேண்டிக் கொள்கிறேன்'' என்றான். அவன் மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு அந்தக் காளி கோவிலை அடைந்தான்.

அந்த ஆலயத்தில் காளிதேவியின் பக்கம் ஒரு திரிசூலம் இருந்தது. வீரசேனன் காளிதேவியை விழுந்து வணங்கிவிட்டு எழுந்தான். "உலகைக் காக்கும் நாயகியே! என் நாட்டில் நல்ல மழை பெய்யச் செய்து என் நாட்டின் பஞ்சத்தைப் போக்கி செழிப்புறச் செய்'' என்று கூறி அந்தத் திரிசூலத்தை எடுத்துத் தன் மார்பில் பாய்ச்சிக் கொள்ளப் போனான்.

அப்போது விக்கிரத்திலிருந்து "வீரசேனா! நில். உன் போன்ற தியாக சீலனை நான் பலி கொள்ள மாட்டேன். உன் விருப்பம் நிறைவேறும்'' என்ற குரல் ஒலித்தது. மறுநிமிடம் வீரசேனனின் கையில் இருந்த திரிசூலம் மின்னல் போலக் கிளம்பி ஆகாயத்தில் சென்று மறைந்தது. மறு நிமிடமே நாடு முழுவதும் நல்ல மழை பெய்தது.

வீரசேனன் தலைநகருக்குத் திரும்பி வந்து காளி கோவிலில் நடந்ததைக் கூறினான். மன்னனும் வீரசேனனைப் பாராட்டி "உன்னால் நம் நாட்டில் பல உயிர்கள் பிழைத்தன. இதனால் மகிழ்ச்சியுற்று நான் இந்நாட்டின் எந்த ஒரு பகுதியையும் உனக்கு அளித்து உன்னை என் சிற்றரசனாக்கிக் கொள்கிறேன். எப்பகுதி வேண்டும் என்று சொல்'' எனக் கேட்டான்.

அதற்கு வீரசேனன் "அரசே! நான் உங்கள் ஊழியனாகத்தான் இந்தப் பணியைச் செய்தேன். எனக்கு நாடும் வேண்டாம். சிற்றரசுப் பதவியும் வேண்டாம். நான் உங்கள்

பணியாளனாக இப்படியே இருந்து விடுகிறேன்'' என்றான்.

இது கேட்டு மன்னன் மகிழ்ந்த தோடு தன் பட்டத்து ராணியுடன் கலந்து யோசித்து அவனது அந்த ரங்கத் தோழியை வீரசேனனுக்குக் கல்யாணம் செய்து வைத்தான். திருமணம் நடந்து ஐந்து ஆண்டுகளாயின. அப்போது வீரசேனன் இரு குழந்தைகளின் தந்தையாகி விட்டான்.

இச்சமயத்தில் அந்நாட்டிற்கு ஒரு பெரிய ஆபத்து வந்தது. தலை நகருக்கு அருகேயுள்ள காட்டிற்கு ஜடாதரன் என்ற ராட்சஸன் எங்கிருந்தோ வந்து சேர்ந்தான். அவன் தன் இஷ்டப்படி எங்கும் போய் மனிதர்களைப் பிடித்துக் கொன்று விழுங்கலானான். பயங்கரமான அவன் ஆயிரம் யானைகள் பலம் கொண்டவன் என்பதும் மன்னனுக்குத் தெரிந்தது.

மன்னன் அந்த ராட்சஸனைப் பற்றி தர்பாரில் கூறி "அந்த ராட்சஸனை அடக்க நம் படைகளை அனுப்பலாம். ஆனால் இதில் நம் பல வீரர்களின் உயிர்களை இழக்க வேண்டிவரும். எனவே அந்த ராட்சஸனிடம் ஒருவனைத் தூது அனுப்பத் தீர்மானித்திருக்கிறேன். ராட்சஸன் கண்டபடி மனிதர்களைப் பிடித்துத் தின்னாமல் இருந்தால் அவனுக்கு தினமும் அவன் சாப்பிடும் அளவிற்கு மாமிசத்தைப் பக்குவப்



படுத்தி நான் அனுப்பத்தயார் என்பதை அந்த தூதன் அவனிடம் தெரிவிக்க வேண்டும். ஆனால் இதில் சிக்கல் என்னவென்றால் நான் அனுப்பும் தூதனையே ராட்சஸன் கொன்று தின்றாலும் தின்று விடுவான். இந்த நிலையில் ராட்சஸனிடம் தூது செல்ல யாராவது முன் வருகிறீர்களா?'' என்று கேட்டான்.

தர்பாரில் இருந்தவர்கள் எல்லோரும் வீரசேனனைப் பார்த்தார்கள். அவர்கள் விருப்பத்தைக் கண்ட மன்னன் வீரசேனனிடம் "வீரசேனா! நீ இதற்கு முன் எவ்வளவோ தீர வீரச் செயல்களைத் துணிச்சலுடன் செய்திருக்கிறாய். நீ உன் உயிரைக் கூட லட்சியம் செய்தது இல்லை. இம்முறையும் நீ இந்தச் செயலைச்

செய்கிறுயா?'' என்று கேட்டான்.

அதற்கு வீரசேனன் ''அரசே! என்னை மன்னியுங்கள், நான் அந்த ராட்சஸனிடம் தூது செல்ல முடியாது'' என்றுன்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! வீரசேனன் போர்கலையில் தேர்ச்சி பெருதிருந்தும் போர்க்களத்தில் துணிச்சலுடன் சமரபுரி மன்னனைத் தாக்கி வீழ்த்தியவன் நாட்டை பஞ்சத்திலிருந்து காக்கக் காளிதேவிக்குத் தன்னையே பலி கொடுத்துக் கொள்ளவும் தயாராக இருந்தவன். இப்படிப்பட்ட துணிச்சல் கொண்ட மாவீரனுன வீரசேனன் ராட்சஸனிடம் தூது செல்ல மறுத்தது விசித்திரமாக இல்லையா? இது அவனது அறிவற்ற செயலா? இக்கேள்விகளுக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறுவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஒரு மனிதன் வாழும் முறை அவனது மற்ற செயல்களோடு சம்மந்தப்பட்டது. வீரசேனன் மணமாகமல் தனிக்கட்டையாக இருந்த போது எந்தச் செயலையும் துணிச்சலுடன் செய்தான். அப்போது குடும்பம் என்ற கவலையோ அதற்கான பொறுப்போ அவனுக்கு இருக்கவில்லை. ஆனுல் இந்தத் தடவை அவன் குடும்பத் தலைவன். தன் மனைவி, மக்களைப் பற்றிக் கவலைப்பட்டு அவர்களுக்குத் தன் கடமையைச் செய்ய வேண்டிய நிலையில் உள்ளவன். இக்காரணத்தால் தான் ராட்சஸனிடம் தூது செல்ல அவன் இசையவில்லை. இது அறிவற்ற செயல் அல்ல. இதனுல் அவன் மதிப்பு குறையவில்லை. அவன் எடுத்த இந்த முடிவு புத்திசாலித்தனமானதே'' என்றுன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# பேராசை

ஒரு மன்னனுக்கு ஒரு குடியான வன் நண்பன். மன்னன் வேட்டைக் குப் போகும்போது எல்லாம் அந் தக் குடியானவன் வீட்டில் ஒரு வேளை தங்கியது மட்டும் அல்லா மல் அவனைச் சர்க்கரை வள்ளி கிழங்குகளைச் சுட்டுக் கொடுக்கச் சொல்லி அவற்றைச் சாப்பிட்டு விட்டு செல்வது வழக்கம்.

ஒருமுறை குடியானவன் ஏதோ ஒரு வேலையாக தலைநகருக்குச் செல்ல வேண்டி வந்தது. குடியானவனின் மனைவி சில வள்ளிக் கிழங்குகளை மூட்டையாகக் கட்டிக் கொடுத்து "அரசருக்கு வள்ளிக் கிழங்கு மிக வும் பிடிக்குமே. இவற்றை அவருக் குக் கொடுங்கள்" என்றாள். அவனோ "இதையா அரசருக்குக் கொடுப் பது? எல்லோரும் சிரிப்பார்கள்" என்றான். எனவே அவன் மனைவி யும் "சிரிக்கட்டுமே. அது பற்றிக் கவலைப்படாமல் அரசரைக் காணச் செல்லும் நீங்கள் இவற்றைக் காணிக் கையாகக் கொடுங்கள் ஏனென் றால் அவருக்கு சர்க்கரை வள்ளி மிகவும் பிடிக்கும்." என்று கூறி அனுப்பினாள்.

குடியானவனும் வள்ளிக் கிழங்கு மூட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினான். வழியில் அவன் வள்ளிக் கிழங்குகளை ஒவ்வொன் றாக எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டே சென்றான். அவன் தலைநகரை அடைந்தபோது ஒரு பெரிய வள்ளிக் கிழங்குதான் மிஞ்சியது.

அவன் தர்பார் வாசலில் நின்று கொண்டு மன்னன் தர்பாரில் அன்றாட வேலைகளைச் செய்வதைப் பார்த்துக் கொண்டிருந்தான். தர் பார் முடிந்ததும் மன்னன் எழுந்து வந்தான். வாசலில் தன் நண்பன் குடியானவன் நிற்பதைக் கண்டு

—எஸ். வெங்கடராமன்—

'வா! வா! எப்போது வந்தாய்? வீட்டில் எல்லோரும் நலமா?'' என்று கேட்டான்.

குடியானவனும் "நலமே! எனக் கூறிதான் கொண்டு வந்த வள்ளிக் கிழங்கை மன்னனிடம் கொடுத்தான். அதைக்கண்டு மகிழ்ந்து ஒரு வீரனைக் கூப்பிட்டு "இதனை நம் பொக்கிஷத்தில் சேர்த்து விட்டு பொக்கிஷகாரரிடம் நான் சொன்னதாகக் கூறி ஆயிரம் பவுன்களை இவருக்குக் கொடு'' என்றான். அத்துடன் இல்லாமல் அந்தக் குடியானவனைத் தன்னோடு சாப்பிட அழைத்துச் சென்றான்.

இதைக் கண்ட தர்பாரில் இருந்த ஒரு பணக்காரன் "ஆ! ஒரு வள்ளிக் கிழங்கிற்கே அரசர் ஆயிரம் பவுன்களைக் கொடுத்தார். நான் இதைவிட உயர்ந்த பொருளை அவருக்குக் காணிக்கையாக அளித்தால் எனக்கு ஆயிரத்திற்கும் மேலாகப் பவுன்களைக் கொடுப்பார்'' என எண்ணினான்.

மறுநாள் அவன் ஒரு உயர்ந்த ஜாதிக் குதிரையை வாங்கிக் கொண்டு போய் மன்னனிடம் காணிக்கையாகக் கொடுத்து "இதனைத் தாங்கள் ஏற்க வேண்டும்'' என்றான். மன்னன் அவன் மனதில் ஏற்பட்ட பேராசையை ஊகித்து விட்டான். அவன் ஒரு வீரனிடம் இரகசியமாக ஏதோ சொன்னான். வீரனும் மன்னன் கூறியபடி பொக்கிஷதாரரிடம் போய் முன்தினம் மன்னன் கொடுத்துனுப்பிய வள்ளிக்கிழங்கைக் கொண்டு வந்தான்.

மன்னன் அதனை அப்பணக்காரனிடம் கொடுத்து "இது மிகவும் அரிய கிழங்கு. இதற்கு நான் ஆயிரம் பவுன்களை விலையாகக் கொடுத்தேன். இவ்வளவு விலையுயர்ந்த பொருளை உனக்கு அளிக்கிறேன்'' எனக் கூறி அந்த வெள்ளிக் கிழங்கை அப்பணக்காரனிடம் கொடுத்தான்.

அந்தப் பணக்காரனின் முகத்தில் அசடு வழிந்தது.



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## உயரிய வாரிசுதாரர்கள்

உத்திரப்பிரதேச மாநிலத்தில் அல்மோரா மாவட்டத்தில் 1887 ல் பிறந்தவர் பண்டித கோவிந்த் வல்லப பந்த். இவர் சுதந்திரப் போராட்டங்களில் முக்கிய அங்கம் வகித்தவர். நம்நாடு விடுதலை பெற்றபின் நம் ஆட்சி முறையைத் திருத்தி அமைத்ததில் முக்கிய பங்கேற்றவர். 1955 லிருந்து 1961 வரை அதாவது அவர் இறக்கும் வரை அவர் இந்திய உள்விவகார அமைச்சராக இருந்தவர். 1957 ல் அவருக்கு 'பாரத ரத்னு' என்ற மிக உயரிய பட்டம் அளித்து கௌரவிக்கப்பட்டது.

அலகாபாத் பல்கலைக் கழகத்தில் 1946 ல் அவர் தாம் ஆற்றிய பட்டமளிப்பு விழா சொற்பொழிவில் பின்வருமாறு கூறினுர்.

இந்திய வரலாறு நம் எல்லோருடைய உயரிய சொத்துக்கள். நாம் அதன் வாரிசுகள். நாம் அனைவரும் ஒரு தாய்மக்கள். நம்நாட்டு உயரிய மதிப்பில் இந்துக்களும் முஸ்லிம்களும் சமமான பங்கு பெறுகிருர்கள். மதங்கள் வேறுபட்டாலும் நம் எல்லோர் உடலிலும் ஓடுவது இந்திய ரத்தமே. பலநூற்ருண்டுகளாக நாம் அனைவரும் ஒரே மண்மீது வாழ்ந்து வருகிரேம். நீண்டகால இந்திய வரலாற்றில் அரசியலிலும் சமுதாய அமைப்பிலும் மதம் முக்கிய பங்கு வகித்து வந்துள்ளது. என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் பிறமதங்களைச் சகித்துக் கொள்ளும் மனப்பான்மை கொண்டது நம் பாரதநாடு.

## உங்களுக்குத் தெரியுமா?

1. சைகிள் வண்டியை முதலில் கண்டு பிடித்தவர் யார்?
2. முதன் முதலாக சர்க்கஸை நடத்தியவர் யார்? எப்போது?
3. முதன் முதலில் சினிமா ஸ்டூடியோவை நிறுவியவர் யார்? அதன் பெயர் என்ன?
4. தற்போதைய சிங்கப்பூரை யார் எப்போது நிறுவினுர்?
5. நம் நாட்டில் மத்திய அரசின் ஆட்சி நிலவும் மிகச்சிறிய பகுதி எது? அதன் மக்கள் தொகை என்ன? அங்கு பேசப்படும் மொழி யாது?

(விடை 36ம் பக்கத்தில்)

# துர்க்கா தேவி



நம் பழங்காலக் கலாசாரத்திற்கு அடிப்படையானவர்கள் ரிஷிக்கள். ஊனக் கண்களுக்குத் தென்பட்ட இயற்கையின் அந்தரங்கங்களை மனக் கண்களால் கண்ட மகாத்மாக்கள் அவர்கள். எனவேதான் அவர்களை மகாத்மாக்கள் என்கிறோம்.

இயற்கையின் அடிப்படையான திவ்விய சக்தி பக்தர்களுக்கு அவரவர் இயல்புகளுக்கும் தேவைகளுக்கும் ஏற்றவகையில் பல உருவங்களில் தோன்றியதாக ரிஷிக்கள் அருளியுள்ளார்கள். அப்படிப்பட்ட உருவங்களில் தாய்மை வடிவான தேவி உருவம் முக்கியமானது. அதன் பெயர்களில் துர்க்கா தேவி என்பதும் ஒன்று.

இமயம் முதல் குமரி வரை தொன்று தொட்டு காளி, வைஷ்ணவி, துர்க்கா, காமாட்சி, மூகாம்பிகை முதலிய பல பெயர்களில் பல்வித உருவங்களில் துர்க்காதேவிக்கு ஆலயங்கள் அமைத்து வழிபட்டு வருகிறார்கள்.

துர்க்கா தேவியைப் பரமசிவனின் மனைவியாக நம் நாட்டவர் கருதுகிறார்

கள். சதிதேவி, பார்வதிதேவி என்பதும் அவளது மற்ற அவதாரப் பெயர்கள். துர்க்கா தேவியின் நான்கு கைகளில் விஷ்ணுவின் சின்னங்களான சங்கு சக்கரங்கள் இருப்பதையும் மகிஷாசுரமர்த்தினி போன்ற உருவங்களில் பலகைகளையும் ஆயுதங்களையும் கொண்டிருப்பதைக் காண்கிறோம். துர்க்கா தேவியின் வாகனம் சிங்கம்.

எல்லோருக்கும் சமமாகக் கருணை மழை பொழியும் துர்க்காதேவி தன்னை வழிபடுபவர்களின் பாவங்களைப் போக்கி அருள் புரிகிறாள் என்பது பக்தர்களின் கருத்து.

# அம்புலிமாமா செய்திகள்



## ரயிலை மிஞ்சிக் கத்துபவர்

ஜப்பானைச் சேர்ந்த யோஷிஹிகோகா என்பவர் 38 வயதானவர். இவர் ஓடும் ரயிலை விடச் சத்தமாகக் கத்தி கத்தும் பந்தயத்தில் வெற்றி பெற்றவர். ஆறு போட்டிகளில் கலந்து கொண்ட இவர் 'போர் வேண்டுமானால் போ' என்று பலமாகக் கத்தினாராம். அந்த ஒலி 115.5 டெசிபலின் குரலுக்குச் சமமாம். அதாவது அந்தக் கத்தல் நம் தலைக்கு மேல் செல்லும் ரயில் தண்டவாளத்தில் உண்டாக்கும் ஒலியை விட 15 மடங்கு அதிகமானது.

## இசை ஒரு மருந்து

நல்ல இசை சில நோய்களைக் குணப்படுத்தக் கூடியது என்பதை நாம் அறிவோம். அண்மையில் சில மருத்துவர்கள், இசை வல்லுநர்கள் ஒன்று கூடி ஆய்ந்து பார்த்ததில் இசை, நோயைத் தடுக்கும் சக்தியைப் பெற்றது எனக் கண்டு பிடித்திருக்கிறார்கள். சில நாட்டுப் பாடல்கள் வீட்டில் வளர்க்கப்படும் மிருகங்களின் உடல் நலத்தை அதிகரித்துப் பேணுகிறது என்பதும் தெரிய வந்துள்ளது.



# இலக்கிய உலகம்

1. இலக்கியத்தில் நோபல் பரிசைப் பெற்ற எகிப்தியர் யார்? எப்போது அவருக்குக் கிடைத்தது?
2. இந்திய மொழிகளில் எல்லாவற்றிலும் தன் தன்மையைக் கலக்கிய மொழி எது?
3. தென்னிந்திய நான்கு மொழிகளில் எந்த மொழியில் இந்த மொழி தன் தன்மையை அதிகமாகக் கலக்கியது?
4. சமஸ்கிருதத்தைத் தவிர வேறு எந்த மொழியில் 2500 ஆண்டுகளுக்கு முன் இலக்கண நூல் எழுதப்பட்டது?
5. ஜம்மு, காஷ்மீரில் பேசப்படும் மொழி யாது?
6. சமஸ்கிருதத்தில் கிடைக்கும் மிகப்பழைய படைப்பு எது?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. கிர்க்பாட்ரிக்மாக்மிலன், 1839ல்.
2. பிரிட்டனின் மாஜி ராணுவ வீரர் பிலீப் ஆஸ்டின், 1769ல்.
3. தாமஸ் எட்வின். 1893 பிப்ரவரி 1ந்தேதி. அதன் பெயர் ப்ளேக் மேரியா.
4. சர். ஸ்டாபோர்டு ராபில்ஸ் 1819ல்.
5. லட்சத்தீவுகள். மக்கள் தொகை 10 லட்சம். மலையாளம்.

### இலக்கியம்

1. நாஸ்ரிக் மகாபோஜோ 1988
2. சமஸ்கிருதம்.
3. தெலுங்கு
4. தமிழ்-தொல்காப்பியம்.
5. டோக்ரி.
6. ரிக் வேதம்.



# அதிசய வரம்!

ஆர்கோஸில் சனிபகவானின் மகளான ஜூனோவின் புகழ் பெற்ற ஆலயம் இருந்தது. அந்த ஆலயத்தின் பிரதான பூசாரி யாக சைடிப் என்ற பெண்மணி இருந்தாள்

சைடிப்பின் இரு புதல்வர் கள் கிளியோபிஸ்ஸூம், பிட்ட னும் ஆவர். அவர்கள் கட்டுமஸ் தான உடல் கொண்டவர்கள். அவர்கள் தம் வயதிலுள்ளவர் களை ஏல்லா விளையாட்டுகளி லும் வென்றனர். அவர்கள் தம் தாயிடம் உயரிய மதிப்பும் வைத் திருந்தார்கள்.





ஒருமுறை தாயும் இரு புதல் வர்களும் வெகுதூரத்திலுள்ள ஓரிடத்திற்கு ஒரு வண்டியில் கிளம்பிச் சென்றூர்கள். அவர் கள் அந்த இடத்தை அடைந்த தும் அவர்களது வண்டியை இழுத்து வந்த இரு குதிரைகளும் இறந்து போயின.



இருசகோதரர்களும் ஊர் திரும்ப இரு குதிரைகள் கிடைக்குமா என்று பார்க்கலானுர்கள். பலரிடம் கேட்டும் அவர்களுக்குக் குதிரைகள் கிடைக்கவில்லை. மாலைப் பொழுதும் வந்து விட்டது.

மறுநாள் காலை ஆர்கோஸ் ஆலயத்தில் வழிபாடு செய்ய அவர்களது தாயார் போய்ச் சேர்ந்தாக வேண்டும். அவ்வளவு தூரம் அவளால் நடந்து சென்று மறுநாள் ஆலயத்தை அடையவும் முடியாது.





இருசகோதரர்களும் என்ன செய்வது என்று யோசித்தார்கள். பிறகு அவர்கள் தம் தாயாரை வண்டியில் ஏறி உட்காரச் சொன்ஞர்கள். அவர்களது தாயார் தம் புதல்வர்கள் குதிரைகளுக்கு ஏற்பாடு செய்திருப்பதாக எண்ணிக் கொண்டாள்.

இருசகோதரர்களும் குதிரை களைப் போலத் தம்மை தாமே வண்டியில் பூட்டிக் கொண்டு வண்டியை இழுத்துச் சென்றார் கள். அவர்களது தாயாரால் அவர் களது அச்செய்கையைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. குதிரை களுக்கு பதிலாக இரு இளைஞர் கள் வண்டியை இழுத்துச் சென் றது வேடிக்கையாக இருந்தது.





கிளியோபிஸ்ஸும் பிட்ட னும் மேடுகளிலும் மழையிலும் செல்ல வேண்டியதாயிற்று. ஆனால் அவர்கள் எங்கும் நிற்க வில்லை. ஆலயத்திற்குப் போக வேண்டிய நேரம் நெருங்க நெருங்க அவர்கள் வேகவேக மாகப் போனார்கள்.

ஆலயத்தில் குறித்த நேரத் தில் அவர்கள் போய்ச் சேர்ந் தார்கள். வழிபாட்டிற்காகக் காத்திருந்தவர்கள் அந்த இரு இளைஞர்களின் செயலை வியந்து பாராட்டினார்கள். தாயிடம் அவர்கள் கொண்ட பாசத்தைப் பாராட்டினார்கள்.





வழிபாடு முடிந்ததும் அந்தத் தாயார் ஆலய தேவதையிடம் தன் புதல்வர்களுக்கு எவ்வித இன்னல்களும் துயரமும் இல்லாமல் சுகவாழ்வு வாழ வரம் அளிக்கும்படி வேண்டினாள்.

இருசகோதரர்களும் இளைப் பாறச் சென்றனர். அவர் தூங்கிக் கொண்டே இருந்தார்கள். ஆம். சாகும்வரை அவர்கள் தூங்கிக் கொண்டேதான் இருந்தார்கள்.





இவ்விதமாக இவர்கள்தம் வாழ்நாளில் இன்னலையோ துயரத்தையோ அனுபவிக்கவில்லை. ஆர்கோஸ் நகரமக்கள் அவர்களது உருவச்சிலைகளை நிறுவி அவர்களை கௌரவித்தார்கள்.



# புரிந்துவிட்டது!

மதக்கூரில் மாதவன் என்பவன் இருந்தான். இவன் கூலி வேலை செய்து பிறரை எதற்கும் எதிர்பாரா மல் மானமாக வாழ்ந்து வந்தான். கூலி வேலை கிடைக்காவிட்டால் அன்று தன் குடும்பத்தோடு பட்டினி கிடப்பானேயொழிய யாரிடமும் கை நீட்டி எதுவும் கேட்கமாட்டான். ஊரார் அவனைத் தன்மானம் மிக்க வன் எனக் கருதி வந்தார்கள்.

ஆனால் ஒரு சிலர் அவனுக்கு கர்வம் அதிகம் எனக் கூறி வெறுத் தும் வந்தார்கள். அந்த ஊரில் கஜபதி என்ற வட்டிக் கடைக்காரன் ஏழைகளுக்குக் கடன் கொடுத்து அநியாய வட்டி வாங்கி வந்தான். அதுமட்டுமல்ல. குறித்த காலத்துள் கடனைத் திருப்பித் தராவிட்டால் அவன் அவர்கள் அடகு வைத்த பொருளையோ வீட்டையோ அல் லது நிலத்தையோ தனதாக்கிக் கொண்டு விடுவான். தன்னிடம் கடன் வாங்க வராத மாதவனை அவன் மிகமிக வெறுத்து வந்தான்.

ஒருநாள் அயலூரிலிருந்து கஜ பதியின் சம்மந்தி சபாபதி திடீரென அவன் வீட்டிற்கு வந்தான். அவன் பேச்சு வாக்கில் கஜபதியிடம் "உங் கள் ஊரில் மாதவன் என்ற கூலி வேலை செய்பவன் இருக்கிறானே அவனை அழைத்துவரச் சொல்லுங் கள்" என்றான்.

கஜபதியோ "அவன் மகா மண்டைக் கர்வம் பிடித்தவன். அவனிடம் உங்களுக்கு என்ன வேலை?" என்று கேட்டான். சபா பதியோ "மாதவன் மிகவும் நல்ல வன். எங்கள் ஊருக்கு அடிக்கடி வந்து போவான். தன்மானம் மிக்க வன். அது கர்வம் அல்ல" என் றான். கஜபதியோ "நாங்களெல் லாம் அவனை கர்வம் பிடித்தவன்

—எஸ். சோபினி—

என்றுதான் நினைக்கிறோம்'' என்றான்.

சபாபதியும் "உனக்கும் அவனுக்கும் ஏதோ தகராறு போலிருக்கிறது. போகட்டும். எங்கள் ஊர் ஏழுமலையிடம் அவன் மூன்று நாட்கள் வேலை செய்தான். அவன் கூலிப் பணத்தைக் கொடுத்து அனுப்பி இருக்கிறான். அதை அவனிடம் கொடுக்க வேண்டும்'' என்றான்.

கஜபதி தன் வேலையாளை அனுப்பி மாதவனை அழைத்து வரச் சொன்னான். ஆனால் சபாபதி அந்த வேலையாளைக் கூப்பிட்டு "நான் வந்திருப்பதாக அவனிடம் சொல்லாதே. உன் எஜமானனே கூப்பிட்டதாகச் சொல்'' என்றான்.

அந்த வேலையாள் மாதவனைக் காணச் சென்ற போது அவன் ஒரு கிழவனோடு பேசிக் கொண்டிருந்தான். ஏதோ வேலை செய்து கொண்டிருந்த மாதவனிடம் கஜபதியின் வேலையாள் அவனைத் தன் எஜமானன் அழைப்பதாகக் கூறவே மாதவனும் "நான் இப்போது கை வேலையாக இருக்கிறேன். இப்போது நான் என் வேலையை விட்டு வரமுடியாது. ஆகையால் என்னை உடனே அவர் பார்க்க வேண்டுமானால் அவர் தாராளமாக இங்கு வரலாம்'' என்று சொல்லி அனுப்பினான்.

அதைக் கேட்டு மாதவனருகே இருந்த கிழவன் "இதென்ன மாதவா! அவ்வளவு பெரிய மனிதர் கூப்பிட்டு அனுப்பியபோது நீ போகாமல் இருப்பது சரியா?'' என்று கேட்டான். மாதவன் புன்



னகை புரிந்தவாறே "அவன் வட்டி யைக் கசக்கிப் பிழிந்து வாங்குவது என்க்குத் தெரியும். பணம் இல்லாத தால்தானே அப்படிச் செய்கிறன். இவனு பெரிய மனுஷன்?" என்று கேட்டான்.

வேலையாள் திரும்பிப் போய் கஜபதியிடம் மாதவன் கூறியதைச் சொல்லவே அவனுக்கு மிகுந்த கோபம் வந்து விட்டது. அவன் சபாபதியிடம் "பார்த்தாயா அவன் மண்டைக் கனத்தை" என்றான். சபா பதி அவனது கோபத்தைத் தணித்து "நீ ஒரு விஷயத்தை மறந்து விட் டாய். நீ கூப்பிட்டதும் உடனே வருவதற்கு மாதவன் உன் அடிமையா என்ன?" என்று கேட்டான்.

அப்போது கஜபதி "இந்த ஊரி லேயே நான் பெரிய மனிதன் நான் கூப்பிட்டதும் உடனே வரத் தானே வேண்டும்" என்றான். சபா பதி சற்று நேரம் பேசமால் இருந்து விட்டுப் பிறகு "இதோ பார். நீ கூப்பிட்ட குரலுக்கு வேலையாள் போல வந்து கைகட்டி நிற்பவன் உன்னிடமிருந்து என்றென்றும் உத வியை எதிர்பார்ப்பவன். ஆனல் மாதவனுக்கு உன் உதவி தேவை இல்லை. இப்படிப்பட்டவன் தன் மானத்தை விட்டு விட மாட்டான்" என்றான்.

கஜபதியும் அவன் சொல்வது சரி என்பது போலத் தலையை ஆட்டினன். அப்போது சபாபதி "அவன் கர்வமிக்கவன் அல்ல என் பதை இப்போதே நிருபிக்கிறேன்" எனக்கூறி கஜபதியின் வேலையாளை அழைத்து "உன் எஜமானர்



படுத்த படுக்கையாக இருக்கிறார் என்றும் அவனிடம் ஏதோ பேச விரும்புவதாகவும் சொல்'' என்று சொல்லி அனுப்பினான்.

வேலையாள் இந்த செய்தியை மாதவனிடம் தெரிவிக்கவே மாதவன் தான் செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே விட்டு விட்டு வந்தான். அவன் கஜபதியை யும் சபாபதியையும் கண்டதும் அவர்களை வணங்கிவிட்டு கஜபதி யிடம் ''உங்களுக்கு உடல்நலமில்லை என்று இப்போதுதான் கேள்விப் பட்டேன். திடீரென ஏதாவது வலி கண்டுவிட்டதா?'' என்று பரி வுடன் கேட்டான்.

கஜபதியும் ''என்னைப் பற்றிய பேச்சை விட்டுத்தள்ளு. என் சம் மந்தி உன்னிடம் ஏதோ பேச வேண்டுமாம்'' என்றான். சபாபதி யும் அவனுக்குச் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்து ''இதனை என் ஊர் ஏழுமலை உன்னிடம் கொடுக் கச் சொன்னான்'' என்றான்.

மாதவனும் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்டு அவர்கள் இரு வரையும் வணங்கி விடை பெற்றுக் கொண்டு சென்றான். அப்போது சபாபதி கஜபதியிடம் ''பார்த் தாயா! நீ நினைக்கிறபடி மாதவன் கர்வம் கொண்டவன் அல்ல. அப் படிப் பட்டவனாக இருந்திருந்தால் மறுபடியும் நீ உன் வேலையாளை அனுப்பிய போது வரமுடியாது என்ற பதிலைச் சொல்லி அனுப்பி இருப்பான். நீ உடல் நலமில்லாது இருக்கிறாய் எனக் கேட்டதும் அவன் உனக்கு உதவும் நோக்கத்தோடு உடனேயே இங்கு வந்தான். தெரிந்ததா?'' என்றான்.

கஜபதியும் 'ஆம்' எனத் தலையை ஆட்டி ''மனிதனின் மனதைப் புரிந்து கொள்வதுதான் எவ்வளவு கடினமானது! இதுவரை நான் அவனைப் பற்றி கொண்டிருந்த அபிப்பிராயம் தவறு எனப் புரிந்து விட்டது'' என்றான்.






மாபெரும் கடலின் கரையில் நின்ற வானரர்கள் பலவிதமாக யோசனை செய்து கொண்டிருந்தனர். சுக்கிரீவன் கொடுத்த ஒருமாத கால அவகாசம் தீர்ந்து விட்டதால் இனி என்ன செய்வது என்றுதான் அப்போது எல்லோரும் நினைத்தார்கள். ஏனெனில் அந்த ஒரு மாதத்துக்குள் சுக்கிரீவனின் கட்டளையை நிறைவேற்றாததால் அதற்கு அவன் எப்படிப்பட்ட கடுந்தண்டனையை விதிப்பானோ என்று அவர்கள் நினைத்து பயப்படலானார்கள்.

அப்போது அங்கதன் அந்த வானரர்களைப் பார்த்துக் கூறலானான். "வானரர்களே! நமக்கு சுக்கிரீவன் அளித்த காலக்கெடு நாம் அந்தக் கரடியின் பொந்தில் இருந்த போதே தீர்ந்து விட்டது. சுக்கிரீவன் ஒரு மாத காலத்துள் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கட்டளை இட்டு நம்மை அனுப்பினான். இப்போது அந்த ஒரு மாதம் தீர்ந்து விட்டது. இனி நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை யோசியுங்கள். இதுவரை சீதாதேவி எங்கு இருக்கிறாள் என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. நாம் இருவிதத்தில் சுக்கிரீவனின் கட்டளைப்படி நடக்க முடியாது போய் விட்டோம். இதனால் கோபம் கொண்டு அவன் நமக்கு மரணதண்டனைதான் விதிப்பான். அங்கு போய் உயிர் விடுவதைவிட இங்கே உண்ணா நோன்பு ஏற்று உட்கார்ந்து உயிரை விட்டு

—சம்பாதியின் வரலாறு—



விடுவோம். சுக்கிரீவனுக்கு என்மீது நல்ல அபிப்பிராயம் கிடையாது. என்னை இராமர்தான் இளவரசனுக்கினார். சுக்கிரீவன் அல்ல. அதனால் அவன் தக்கசமயம் பார்த்து என்னை ஒழிக்கக் காத்துக் கொண்டிருக்கிறான். எனவே இப்போது நான் கிஷ்கிந்தைக்குச் சென்றால் என்னை அவன் கொன்று விடுவான். அவ்வாறு அங்கு போய்ச் சாவதை விட இங்கே நானே மரணத்தை ஏற்பது மேல்தானே!''

இவ்வாறு அவன் கூறியதைக் கேட்ட மற்ற வானரர்கள் ''ஆம். சீதாதேவியைப் பற்றிய தகவலை நாம் அறிந்த பிறகே நாம் கிஷ்கிந்தைக்குப் போகமுடியும். அது முடியா விட்டால் நாம் இங்கேயே உயிரை விட்டு விடலாம்'' என்றார்கள்.

அப்போது தாரன் ''நாம் ஏன் இறக்க வேண்டும்? மறுபடியும் அந்தக் கரடிப் பொந்திற்குள் போய் அங்கு சுகமாகக் காலம் கழிப்போம். அங்கு உண்ண உணவு நிறைய உள்ளது. மேலும் அங்கு சுக்கிரீவனைப் பற்றி நாம் பயப்படவும் தேவை இல்லை'' என்றான்.

இதைக்கேட்ட அனுமார் தமக்குள் ''ஓ! இந்த அங்கதன் சுக்கிரீவனுக்கு எதிராகக் கிளம்புகிறானே! இவன் வாலியின் மகனாயிற்றே. கூரிய அறிவு படைத்தவன். எதை எப்போது எப்படிச் சொல்ல வேண்டும் என்பதை நன்கு அறிந்தவன்'' என நினைத்துக் கொண்டார்.

அவர் அங்கதனிடம் ''அங்கதா! நீ உன் தந்தை வாலியைப் போல பலமும் அறிவும் படைத்தவன் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் இந்த வானரர்கள் எல்லாம் எப்போதுமே உன்னோடு இருப்பார்களா? அவர்களுக்குக் குடும்பம், மனைவி, குழந்தை, குட்டிகள் என்றெல்லாம் இருக்கிறார்களே. மேலும் என் போன்றவர்களையும் ஜாம்பவான் போன்றவர்களையும் சுக்கிரீவனிடமிருந்து பிரித்து உன்னோடு சேர்த்துக் கொள்ள முடியாது. இந்தக் கரடியின் பொந்தை இலட்சுமணனின் அம்புகள் நொடியில் துளைத்து நாசமாக்கி விடும். நீ மட்டும் சுக்கிரீவனை விரோதித்துக் கொண்டால்

எல்லா வானரர்களும் உன்னேடு இருக்க மாட்டார்கள். அவர்கள் உன்னை விட்டுப் போய் விட்டால் உன்னை யார் மதிப்பார்கள்? சுக்கிரீவன் மிகவும் நல்லவன். உன்னை வெறுப்பவன் அல்ல. உன் தாய் மீது உயரிய மதிப்பும் கொண்டவன். அவன் உன்னைத் தன் மகன் போலத் தான் எண்ணிக் கொண்டிருக்கிருன்'' என்ருர்.

ஆனல் அங்கதனே ''நீங்கள் சொல்வதை நான் எப்படி ஏற்பது? நீங்களே யோசித்துப் பாருங்கள். தன் அண்ணன் குகைக்குள் கிடந்தே சாகட்டும் என நினைத்து குகையின் வாயிலைப் பாருங்கல்லால் மூடியவன் சுக்கிரீவன். இராமர் அவனுக்கு எப்படியெல்லாம் உதவினர்! அதை எல்லாம் மறந்து போனவன் அவன். இலட்சுமணனின் மிரட்டலுக்கு பயந்துதானே இப்போது அவன் சீதாதேவியைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிருன்! இப்படிப்பட்டவனையா நீங்கள் நல்லவன் என்கிறீர்கள்? மேலும் நான் அவனுக்கு எதிராக வானரர்களிடையே பேசியது தெரிந்தால் அவன் என்னைச் சும்மா விட்டு விடுவான? நான் கிஷ்கிந்தைக்குப் போக மாட்டேன். இங்கேயே அமர்ந்து உண்ணு நோன்பு ஏற்கிறேன். நீங்கள் எல்லோரும் கிஷ்கிந்தைக்குச் செல்லுங்கள். இராமரிடமும் இலட்சுமணனிடமும்



என் பணிவான வணக்கங்களைக் கூறுங்கள்'' என்ருன்.

அங்கதன் இவ்வாறு கூறித் தன் தாயை நினைத்து வருந்தியவாறே ஓரிடத்தில் அமர்ந்து உண்ணுநோன்பை மேற்கொண்டான். அதைக்கண்டு மற்ற வானரர்களும் கண்ணீர் விட்டு அவனேடு சேர்ந்து அமர்ந்து உண்ணு நோன்பை மேற்கொண்டார்கள்.

அப்போது அவர்கள் உரத்த குரலில் இராமரின் வனவாசம் பற்றியும், சீதையை இராவணன் கவர்ந்து சென்றதையும் ஜடாயு அவனை எதிர்த்துப் போராடியது பற்றியும் தாம் எங்கெல்லாம் சீதாதேவியைத் தேடிப் பார்த்தாகி விட்டது என்பது பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள்.



இந்தப் பேச்சைக் கேட்டு ஒரு குகைக்குள்ளே இருந்த ஒரு பெரிய கழுகு அதிலிருந்து வெளியே வந்தது. அது சற்று தூரத்தில் நின்று வானரர்களைப் பார்த்து "ஆஹா! நான் வயிறு நிறைய உண்ண நல்ல வேட்டை கிடைத்திருக்கிறதே" என்று எண்ணி மகிழ்ந்தது.

பயங்கரக் கழுகைக் கண்ட வானரர்கள் பயந்து விட்டார்கள். அப்போது அங்கதன் "இந்தக் கழுகு சூரியனின் மகனான சம்பாதி. ஜடாயு இவன் தம்பி. அவன் இராவணனை எதிர்த்துச் சண்டையிட்டு சீதையை மீட்கும் முயற்சியில் தன் உயிரையே தியாகம் செய்தவன். அவனைப் போல நம்மால் இராமருக்காகப் போராடி உயிர்துறக்க முடியவில்லையே" என்றான்.

அதைக்கேட்ட சம்பாதி "ஆ! என் தம்பி ஜடாயு இறந்து விட்டானா? இப்படிப்பட்ட துக்ககரமான செய்தியை இப்போது எனக்குக் கூறியவன் யார்? என்னால் இதைக் கேட்டு நிம்மதியுடன் இருக்க முடியவில்லையே. ஜடாயு இராவணனுடன் சண்டை போட்டானா? எதற்காக? வெகு காலத்திற்குப் பின் இப்போதுதான் ஜடாயுவின் பெயரையே கேட்கிறேன்" எனக் கூறியவாறே வானரர்களின் அருகே சென்றான்.

அவன் வானரர்களைப் பார்த்து "வானரர்களே! நான் சம்பாதி. ஜடாயுவின் அண்ணன். என் இறக்கைகள் சூரியனின் கிரணங்களின் வெப்பத்தைத் தாங்க முடியாமல் கருகிப் போயின. அதனால் நான் எங்குமே போகமுடியாமல் இங்கேயே இருக்கிறேன். எனக்கு ஜடாயு பற்றிய விவரங்களைக் கூறுங்கள்" என்றான்.

அங்கதனும் அவனைப் பிடித்து ஓரிடத்தில் உட்கார வைத்து எல்லா விஷயங்களையும் விவரமாக அவனிடம் கூறலானான்:

"இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றிய தசரத மன்னரின் புதல்வர் இராமர். அவர் தம் தந்தையின் சொற்படி வனவாசத்தை ஏற்றுத் தம் மனைவி சீதாதேவியுடனும் தம்பி இலட்சுமணனுடனும் தண்டகாரண்யத்திற்கு வந்தார். அவர்

ஜனஸ்தானத்தில் இருக்கையில் இராவணன் அவரது மனைவி சீதா தேவியைக் கவர்ந்து சென்றான். இராவணன் சீதையைக் கவர்ந்து செல்வதை தசரதனின் நண்பனான ஜடாயு பார்த்தான். ஆகாய மார்க்கமாய்ச் சென்ற இராவணனை அவன் எதிர்த்துச் சண்டையிட்டு முடிவில் இறந்தான். இராமர் ஜடாயுவின் ஈமச்சடங்குகளைச் செய்தார். அதன் பிறகு அவர் எம்பகுதிக்கு வந்தார். அவர் என் சிறிய தந்தையான சுக்கிரீவனுடன் நட்பு கொண்டு என் தந்தை வாலியை கொன்று சுக்கிரீவனை கிஷ்கிந்தையின் மன்னனாக்கினார். அந்த சுக்கிரீவ மன்னனின் கட்டளைப்படி சீதா தேவியைத் தேடிக் கொண்டு இங்கு வந்திருக்கிறோம். அந்தக் கட்டளைப்படி நடக்க முடியவில்லை. நாங்கள் கிஷ்கிந்தைக்குச் சென்றால் எங்களுக்கு மரண தண்டனைதான் கிடைக்கும்.''

சம்பாதியும் "இராவணனோடு சண்டையிட்டு இறந்த ஜடாயு என் தம்பிதான். நானோ வயதாகிக் கிழத்தனத்தை அடைந்து விட்டேன். என் இறக்கைகளையும் இழந்து விட்டேன். அதனால் இராவணனை பழிவாங்க முடியாது. ஒருமுறை நானும் என் தம்பியும் போட்டி போட்டிக் கொண்டு உயரப் பறந்தோம். சூரிய வெப்பத்தைத் தாங்க முடியவில்லை அவனைக் காக்க நான் இறக்கைகளை விரித்து அவன் மீது வெப்பம் விழாமல்



தடுத்தேன் அம்முயற்சியில் என் இறக்கைகள் கருகிப் போயின. நான் விந்திய மலை மீது விழுந்தேன். அது முதல் எங்கும் போக முடியாமல் இங்கேயே இருந்து வருகிறேன். இதுவரை என்தம்பியைப் பற்றி எதுவும் நான் அறிந்து கொள்ளவும் முடியவில்லை'' என்றான்.

அப்போது அங்கதன் "அந்த இராட்சஸ மன்னன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான். சம்பாதியும் "நானும் இராவணன் அழகிய பெண் ஒருத்தியைக் கவர்ந்து சென்று கொண்டிருந்ததை அறிந்தேன். அவள் இராமா! இராமா!!'' என்று கத்திக் கொண்டிருந்தாள். அந்தப் பெண் நீங்கள் தேடும் சீதையாகத்தான் இருக்க வேண்டும்.



இராவணன் ஒரு அழகிய தீவில் இலங்காபுரி என்ற நகரில் இருப்பவன். நீங்கள் கடலேக் கடந்து அந்தத் தீவை அடைந்து இலங்கைக்குச் சென்ருல் அவனேயும் சீதையையும் காணலாம். அத்தீவு இங்கிருந்து நூறு யோசனே தூரத்தில் உள்ளது'' என்ருன்.

வானரர்கள் சம்பாதியைக் கடலின் அருகே கொண்டு சென்றனர். அங்கு அவன் தன் தம்பி ஜடாயுவுக்கு ஜலதர்ப்பணம் செய்தான். வானரர்களோ சீதையைப் பற்றிய தகவல் கிடைத்ததே என்று மகிழ்ந்து போனர்கள்.

ஜாம்பவான் சம்பாதியிடம் இராவணது செயல் பற்றி மேலும் விவரங்களேக் கேட்கவே சம்பாதியும் கூறலானுன்.

"நான் இறக்கைகளே இழந்து இந்த மலே மீது விழுந்தது முதல் இங்கேயே நான் இருந்து வருகிறேன். எனக்கு உணவை என் மகன் சுபார்சுவன் தான் தினமும் வேளாவேளேக்குக் கொண்டு வந்து கொடுக்கிருன். ஒருநாள் அவன் குறித்த வேளேக்கு வராமல் வெகு நேரம் கழித்து வந்தான். அதுவும் உணவு கொண்டு வராததால் அவனேக் கோபித்துக் கொண்டேன். அவனே என்னேச் சமாதானப்படுத்தி தான் உணவு தேடி மகேந்திர மலேக்கு சென்றதாயும் அப்போது பயங்கரத் தோற்றம் கொண்ட ஒருவன் அழகிய பெண் ஒருத்தியைக் கண்டதாகக் கூறினுன். அவர்களேப் பிடித்து உணவாக்கிக் கொள்ளலாம் என நினேத்து என் மகன் அவர்களேத் தடுத்து நிறுத்தினுன். பயங்கரப் பேர்வழியோ என் மகனே வழியை விட்டுப் போகும் படிக் கூறினுனுன். அவன் மிரட்டாமல் நயமாகக் கூறியதால் என் மகன் அவர்களுக்கு வழிவிட்டான். அப்போது அந்த பயங்கரப் பேர்வழி வெகு வேகமாகப் போய் விட்டானும். அதன் பிறகு என் மகன் ஆகாச பூதங்களிடம் அந்த பயங்கரப் பேர்வழி யார் என்று கேட்டான். அவன் தான் ராட்சஸ மன்னன் இராவணன் என்றும் அவன் கவர்ந்து செல்லும் பெண்மணி இராமரின் மனேவி சீதை என்றும் அவை கூறின. அதற்

குப் பிறகு அவன் உணவு எதுவும் கிடைக்காததால் திரும்பி வந்தானும்'' என்முன்.

இதன் பிறகு வானரர்கள் சம்பாதியை அங்கிருந்து அவனது இருப்பிடத்தில் கொண்டு போய் விட்டார்கள். அங்கு அவன் வானரர்களிடம் தன் கடந்த கால வரலாற்றைக் கூறலானுன்.

''நான் இறக்கைகளே இழந்து இந்த மலேமீது விழுந்த போது இங்கு ஒரு ஆசிரமம் இருந்தது. அதில் நிசாகரர் என்ற மாமுனிவர் இருந்தார். நான் கூறுவது எட்டாயிரம் வருடங்களுக்கு முன் நடந்த சம்பவங்கள். இந்த மலே மீது விழுந்த நான் மிகவும் சிரமப்பட்டு மேடு பள்ளங்களேக் கடந்து வந்து ஆசிரமத்தை அடைந்தேன். அங்கு ஒரு மரத்தடியே நான் உட்கார்ந்து கொண்டு முனிவரை தரிசிக்கக் காத்துக் கொண்டிருந்தேன். அப்போது நான் ஒரு அதிசயத்தைக் கண்டேன். அந்த முனிவர் நீராடி விட்டுத் தென் திசையிலிருந்து வந்த போது அவர் பின்னுல் கரடிகள், புலிகள், சிங்கங்கள் யானேகள் பாம்புகள் எல்லாம் வருவதைக் கண்டேன். அவர் ஆசிரமத்துள் சென்றதும் அவையாவும் போய் விட்டன. ஆசிரமத்துள் செல்லும் போது அந்த முனிவர் என்னேப் பார்த்து விட்டார். சற்று நேரத்திற்குப் பிறகு அவர் திரும்பி வந்து



''கழுகுகளின் ராஜக்களான இரு சகோதரர்களே நான் அறிவேன். நீதானே அவர்களில் பெரியவனுன சம்பாதி? ஜடாயுதானே உன் தம்பி? நீங்கள் இருவரும் அவ்வப்போது மனித உருவில் வந்து என்னே வணங்கிச் செல்வீர்களே. உனக்கு உடம்பு சரி இல்லேயா? ஏன் உன் இறக்கைகள் விழுந்து போயின?'' என்று கேட்டார்.

நானும் அவரிடம் என்னேப் பற்றிக் கூறினேன். நானும் என் தம்பியும் போட்டி போட்டுக் கொண்டு ஆகாயத்தில் வெகு உயரமாய்ப் பறந்து சென்றதைச் சொன்னேன். அப்போது பூவுலகிலுள்ள நகரங்கள் சிறுபுள்ளிகளாகத் தெரிந்தன. வழியில் வேதகோஷங்களேக்

கேட்டோம். சிவப்பு நிறப்புடவை களை உடுத்தி பாட்டுக்கள் பாடிக் கொண்டிருந்த பெண்களைப் பார்த்தோம். அடர்ந்த காடுகள் பச்சை நிறக்கட்டிகளாயும் மலைகள் சிறு கற்களாயும் தெரிந்தன. நதிகள் நூல்போல இருந்தன. இதனால் பயந்து கண்ணை மூடிக் கொண்டு உயரப் பறந்து கொண்டே இருந்தோம். இதனால் சூரியனைக் கூடப் பார்க்கவில்லை.

ஆனால் திடீரென ஜடாயு சூரிய வெப்பம் தாங்க முடியவில்லை எனவே நான் என் இறக்கைகளை விரித்து அவன் மீது சூரிய வெப்பம் படாமல் தடுத்தேன். என் இறக்கைகள் அந்த வெப்பத்தில் கருகி விழுந்தன. ஜடாயும் நானும் கீழே விழலானோம். அவன் ஜனஸ்தானத்தில் விழுந்தான் நான் இங்கு விழுந்தேன்" எனக்கு இனி வாழ வேண்டும் என்ற ஆசை இல்லை.

இவ்வாறு நான் கூறியதும் அந்த முனிவர் என் வருங்காலம் பற்றிக் கூறினார். நீங்கள் எல்லாம் சீதையைத் தேடிக் கொண்டு இங்கு வருவீர்கள் என்று அவர் சொன்னார். உங்களுக்கு நான் உதவி புரிந்தால் என் இறக்கைகள் மீண்டும் வந்து விடும் என்றார். என்னையும் இங்கேயே இருக்கவும் சொன்னார்.

இவ்வாறு சம்பாதி கூறி முடித்ததும் அவனுக்கு இறக்கைகள் வந்து விட்டன. அவற்றின் இறகுகள் சிவப்பாக இருந்தன. வானரர்கள் அது கண்டு ஆச்சரியப்பட்டார்கள். சம்பாதியோ மிகவும் மகிழ்ந்து போய் "நிசாகர முனிவர் கூறியபடி எனக்கு மீண்டும் இறக்கைகள் வந்து விட்டன. என் உடலிலும் சக்தி வந்து விட்டது. நீங்களும் உங்கள் முயற்சியில் வெற்றி பெறுவீர்கள் என்பதற்கு இது ஒரு சூசகம் நான் இனிப் பறந்து செல்கிறேன்" எனக்கூறி இறக்கைகளை விரித்து ஆகாயத்தில் பறந்து சென்றது.






# வெள்ளிப் பல்!

ஒரு ஊரில் பொன்னன் என்றும் சின்னன் என்றும் இரு நண்பர்கள் இருந்தனர். இருவருக்கும் உறவினர்கள் என்று யாருமே இல்லை. இருப்பதற்கு அவர்களுக்கு வீடு கிடையாது. கூலிவேலை செய்து ஒரு மரத்தடியே இரவில் படுத்துத் தூங்குவார்கள். தம் தட்டு முட்டு சாமான்களை அதே மரத்தின் பொந்தில் வைத்துக் கொண்டிருந்தார்கள். தினமும் இரவில் தான் சமைத்துச் சாப்பிட்டு வந்தார்கள்.

ஒரு நாளிரவு அவர்கள் அம்மரத்தடியே வந்து சமையல் செய்ய நினைத்த போது அம்மரத்தின் பொந்திலிருந்து இரு கைகள் சமையல் பாத்திரங்களை எடுத்து நீட்டின. அதைக் கண்டு இருவரும் ஆச்சரியப்பட்டார்கள். அப்போது ஒரு பூதம் அவர்கள் முன் வந்து "நீங்கள் இல்லாத போது உங்கள் பொந்தில் வந்து இருந்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்றது.

பூதத்தைக் கண்டு முதலில் மிரண்ட அவர்கள் அது பேசியதைக் கேட்டபின் தைரியம் அடைந்தவர்களாய் "நாங்கள் இல்லாத போது நீ இதற்குள் போனது தவறுதான் தெரிந்ததா?'' என்று கூறினார்கள்.

அப்போது அந்த பூதம் அவர்களது கால்களில் விழுந்து கண்ணீர் வடித்தவாறே "என்னை மட்டும் இங்கிருந்து போகச் சொல்லி விடாதீர்கள். அப்புறம் எனக்கு இருக்க எந்த இடமும் கிடைக்காது. என் பூத நண்பர்களோடு இருக்க எனக்குத் தகுதி இல்லாமல் போய் விட்டது. அவர்கள் என்னைத் துரத்தி விட்டார்கள்'' என்றது.

பூதம் அழுது கொண்டே இப்படிக் கெஞ்சியது அவர்களது மனதை இளக்கி விட்டது. அவர்

—சுதா குமார்—



கள் அதனிடம் "உனக்கு உன் நண் பர்களோடு இருக்க ஏன் தகுதி இல்லை?" என்று கேட்டார்கள்.

அப்போது பூதம் தன் பெரிய வாயை அகலமாகத் திறந்து காட்டி "பாருங்கள் என் கோரைப் பற் கள் இரண்டு விழுந்து விட்டன. இப்படிப் பல்போன பூதம் தம் மோடு இருப்பது தமக்கு அவமானம் எனக் கூறி அவை என்னை விரட்டி விட்டன. அதனால் நான் இங்கே வந்தேன். என்னை உங்களோடு வைத் துக் கொள்ளுங்கள். உங்களுக்கு எல்லாவிதத்திலும் உதவி புரிவேன். நீங்கள் சாப்பிடும் சாப்பாட்டில் ஒரு பிடி எனக்கு கொடுத்தால் போதும். அதைச் சாப்பிட்டு விட் டுத் திருப்தியுடன் இருப்பேன். அது போதும்" என்றது.

அதைக் கேட்ட பொன்னன் "எங்கள் ஒரு சாண் வயிற்றை நிரப்பிக் கொள்ள நாங்கள் படாத பாடுபட வேண்டியிருக்கிறது. பானை போலுள்ள உன் வயிறு நிரம்ப வேண்டுமானால் எவ்வளவு பாடு பட வேண்டும்! எங்களால் உன்னை வைத்து சாப்பாடு போட முடியாது. வேறு எங்காவது போய் விடு" என்றான்.

ஆனால் சின்னனே "பொன்னா! அவசரப்படாதே. கொஞ்சம் நிதான மாக விசாரித்து முடிவு செய்யலாம். பூதமே! உன் கோரைப் பற்கள் எவ்வாறு விழுந்தன என்று சொல் கிறாயா?" என்று கேட்டான்.

பூதமும் அவனைக் கொஞ்சுவது போலப் பார்த்து "அது ஒரு பெரிய கதை..." என்று இழுத்தது. அப் போது பொன்னன் "உன் கதையை எல்லாம் கேட்டுக் கொண்டிருக்க எங்களால் முடியாது. நீ எதுவும் சொல்ல வேண்டாம் போ. போ" என்று கூறினான்.

அப்போது பூதம் அழாத குறை யாக "என் கோரைப் பற்கள் போய் விட்டதால்தானே என்னால் எதையும் சாப்பிட முடியவில்லை என் உணவிற்காக எதையும் பிடிக் கவும் முடியவில்லை. எனக்கு வாழ்க் கையே வெறுத்து விட்டது. என் போன்றவர்கள் இருப்பதைவிட இறப்பதே மேல்" என்றது.

அதைக் கேட்ட பொன்னனுக்கே மனம் இளகி விட்டது. அவன் அதனிடம் "சரி சரி. இங்கே ஒரு மூலையில் இருந்து கொள். எங்கும் போக வேண்டாம்" என்று கூறி ஞன். பூதமும் அந்த இருவரையும் வணங்கித் தன் நன்றியைத் தெரி வித்தது.

அப்போது சின்னன் "உன் கோரைப் பற்கள் எப்படி உதிர்ந் தன என்று சொல்லவில்லையே விவரமாகச் சொல்" என்று கேட் டான். பூதமும் நீண்ட மூச்சு விட்ட வாறே "அது பற்றித் தக்க சமயத் தில் கூறுகிறேன். இப்போது நன்கு இருட்டி விட்டது. சமையலை நான் செய்கிறேன்" என்று கூறி அடுப்பை மூட்டச் சென்றது. அன்று சமயலை அதுவே செய்து அவர்களோடு உட்கார்ந்து சாப்பிட்டது. அந்த பூதத்தின் சமையலை நண்பர்கள் இருவரும் வெகுவாக ரசித்துச் சாப் பிட்டார்கள்.

மறுநாள் காலை அந்த பூதம் அந்த இரு நண்பர்களும் எழுந்திருக் கும் முன்பே எழுந்து மரத்தடியோ இருந்த குப்பை கூளங்களைப் பெருக்கி அள்ளி தூரப் போட்டு விட்டு அந்த இடத்தை சுத்தம் செய்தது. பிறகு அவர்களது துணிகளை எடுத்துப் போய்ச் சற்று தூரத்திலுள்ள கண் மாயில் துவைத்து அலசிப் பிழிந்து எடுத்து வந்து உலர்த்தியது. அன் றைய சமையலுக்கு வேண்டிய சுள்ளி




கட்டைகளை எடுத்து வந்தது. இவ் வாறு பூதம் செய்ததை எல்லாம் கண்டு அந்த நண்பர்கள் மகிழ்ந்து போனர்கள்.

வழக்கத்தை விட அதிகமாக அன்று பொன்னனும் சின்னனும் கூலி வேலை செய்தார்கள். ஏனெ னில் இப்போது பூதத்திற்கும் சாப் பாடு போட வேண்டிய பொறுப்பு அவர்கள் மீது விழுந்தது. பூதம் என்னவோ ஒரு பிடிசாதம் போட் டால் போதும் என்று சொன் ஞலும் இரவில் வடித்த ஒரு பானை சோறில் ஒரு பருக்கை கூட மிஞ்ச வில்லை.

அன்று மாலை கணக்குப் பார்த் துக் கூலி கொடுத்த மேஸ்திரி "என்னப்பா! கப்சிப்பென்று யாருக்



கிறுன். அது போல நம் பூதத்திற்கு நாம் தங்கக் கோரைப் பற்களைக் கட்டி வைக்கலாமே'' என்றுன்.

சின்னுனும் "தங்கப்பல்லா! நம் மால் அது முடியாது வேண்டுமானல் நாம் சேர்த்து வைக்கும் பணத்தில் வெள்ளிக் கோரைப் பற்களைக் கட்டி விடலாம். கட்டப்படும் பல் தங்கத் தால் இருந்தால் என்ன? வெள்ளி யால் இருந்தால் என்ன? எல்லாம் ஒன்று தானே. அந்த வெள்ளிப் பற் களை வைத்து விட்டால் பூதம் தன் இரையைத் தேடிக் கொள்வதோடு நமக்கு நன்றி தெரிவிக்கும் வகை யில் நம் வேலைகளை எல்லாம் செய்து வரும். எனவே அதற்கு வெள்ளிப் பற்களைக் கட்டுவதாக அதனிடம் தெரிவிக்கலாம். அதுவும் மிகவும் மகிழ்ச்சி அடையும்'' என்றுன்.

மறுநாள் காலை அவர்கள் பூதத் திடம் அதற்கு வெள்ளிக் கோரைப் பற்களைப் பொருத்தி விடப் போவ தாகக் கூறவே அது ஒரேயடியாக மகிழ்ந்து போயிற்று. பொன்னுனும் சின்னுனும் அதுவரை தாம் சேமித்து வைத்திருந்த பணத்தை எடுத்துக் கொண்டு பட்டணத்திற்குக் கிளம் பினர்கள்.

பட்டணத்தை அடைந்து வெள் ளிக் கோரைப் பற்களை யார் செய்து தருவார்கள் என்று அவர்கள் விசா ரித்த போது தான் அது எவ்வளவு சிரமமானது என்பது அவர்களுக் குப் புரிந்தது. யாரும் அவர்களுக்குச்

கும் சொல்லாமல் உங்கள் கல்யா ணத்தைச் செய்து கொண்டு விட்டீர் களா? வழக்கமாகச் செய்யும் வேலையைவிட அதிகம் செய்து அதி கக் கூலி வாங்குகிறீர்களே'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

மேஸ்திரி சிரித்த போது அவன் தங்கப் பல் கட்டிக் கொண்டிருந்த தைப் பொன்னுனும் சின்னுனும் கவனித்து விட்டார்கள். பளபள வென மின்னும் அந்தப் பல்லைப் பார்த்ததும் அவர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது.

அவர்கள் கூலியை வாங்கிக் கொண்டு தம் இருப்பிடத்திற்குச் செல்லும் போது பொன்னுன் சின்னுனிடம் "மனிதன் பல் உதிர்ந்து விட்டால் தங்கப் பல் கட்டிக் கொள்

சரியான பதிலைக் கொடுக்காமல் அவர்களைப் பேய் பிசாசைப் பார்ப்பது போலப் பார்த்துவிட்டுப் போனார்கள்.

இனி அப்படி விசாரிக்கக் கூடாது என எண்ணி அவர்கள் தங்கப்பன் என்பவனிடம் "நாங்கள் ஒரு நாடகம் போடப் போகிறோம். அதில் ஒரு பூதம் வருகிறது. அந்த வேஷம் போடுபவனுக்குப் பொருத்த இரண்டு வெள்ளிக் கோரை பற்கள் செய்ய வேண்டும். அதனை யாரிடம் செய்யக் கொடுப்பது?" என்று கேட்டார்கள்.

தங்கப்பனும் தானே அவற்றைச் செய்து கொடுப்பதாகக் கூறி அவர்களிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டான். ஒரு வாரத்தில் அவற்றைச் செய்து கொடுப்பதாகச் சொல்லி அவர்களை அனுப்பினான். அவர்களும் ஒரு வாரம் கழித்தும் பட்டணம் போய் தங்கப்பனைப் பார்த்தார்கள். அப்போது தங்கப்பனோடு அவனது ஏழு வயது மகன் இருந்தான். அவன் வெள்ளிக் கோரைப் பற்களை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்துத் தன் தந்தையிடம் பல கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

தங்கப்பன் பொன்னனையும் சின்னனையும் கண்டதும் "வாருங்கள். தக்க சமயத்தில் வந்தீர்கள். இவன் என் மகன் முத்து. இவன் இந்தப் பற்களைப் பற்றி ஏதேதோ கேட்



கிறான். நீங்களே பதில் சொல்லுங்கள்" என்றான்.

முத்து அவர்களை வியப்புடன் பார்த்து "நீங்களா இந்த வெள்ளிக் கோரைப் பற்களைச் செய்யச் சொன்னது. ஏதோ ஒரு நாடகத்தில் பூத வேஷக்காரனுக்கு இவற்றைப் பொருத்தப் போகிறீர்களாமே. அதென்ன நாடகம்? பூதத்திற்கு வெள்ளிக் கோரைப் பற்கள் எதற்கு?" என்று கேட்டான்.

அதுகேட்டு சின்னன் "நாடகக் கதையா? கேள். ஒரு மந்திரவாதியிடம் ஒரு பாட்டிலில் ஒரு பூதம் இருந்தது. அது மகா சோம்பேறி. அதனால் அதன் கோரைப் பற்களை மந்திரவாதி பிடுங்கி அதனைத் துரத்தி விட்டான். அது ஒரு ஏழை



யின் வீட்டை அடைந்து தன் நிலை யைக் கூறி அவன் மனதைக் கரைத்து அங்கு புகலிடம் பெற்றது. அந்த ஏழை தான் சேமித்த பணத்தில் இரண்டு வெள்ளிக் கோரைப் பற்களைப் பொருத்தினான். அந்த பூதமும் அவனுக்கு நன்றி செலுத்தி அவனுக்கு உதவி புரிந்து அவனோடு இருந்து விட்டது. இதுதான் கதை" என்றான்.

சிறுவனும் "இந்தக் கதை சரி இல்லை. சோம்பேறியான பூதம் ஏதாவது வேலை செய்யுமா? அது அவனுக்கு உதவாமல் கோரைப் பற்கள் கிடைத்ததும் அவனை விட்டுப் போய் விடுமே" என்றான்.

பொன்னனும் சின்னனும் அதற்கு பதில் கூறமுடியாமல் தங்கப்பனிடமிருந்து வெள்ளிக் கோரைப் பற்களை வாங்கிக் கொண்டு சென்றார்கள். வழியில் சின்னன் "அந்தப் பையன் சொன்னது போல நாம் பூதத்திற்கு கோரைப் பற்களைப் பொருத்தியதும் அது நம்மை விட்டுப் போய் விடுமா?" என்று கேட்டான்.

பொன்னனும் "நம் பூதம் மிகவும் நல்லது. அது போகாது. எதற்கும் அதன் முந்தைய வரலாற்றை விவரமாகக் கேட்டு அறியலாம்" என்றான்.

அவர்கள் தம் ஊரை அடைந்து தம் மரத்தடியே போய் பூதத்திடம் நடந்ததைக் கூறி "நீ அந்த சிறுவன் கூறியது போல் எங்களை விட்டுப் போய் விடுவாயா?" என்று கேட்டார்கள்.

அப்போது பூதம் கண்ணீர் வடித்து "என் கோரைப் பற்கள் எப்படிப் போயின என்று கூறுகிறேன். என்னை ஒரு மந்திரவாதி பிடித்து ஒரு பாட்டிலில் அடைத்தான். அந்த மந்திரவாதியின் நண்பன் பூதலிங்கம். அவனும் ஒரு பூதத்தைப் பிடித்து வைத்திருந்தான். அந்த நண்பர்கள் இருவரும் தம் பூதங்களுக்கு இடையே போட்டி வைத்தார்கள். பனைமரத்தைப் பிடுங்கி தூக்கிக் கொண்டு ஓடுவது, நதியில் முதலையோடு சண்டை போடுவது போன்றவை அப் போட்டிகள். ஒருமுறை ஒரு பெரிய

பாறையில் இரும்பு ஆணி அடித்து அதை நாங்கள் கோரைப் பற்களால் பற்றி ஒரு கோச தூரம் இழுத்துப் போய் ஒரு மேட்டில் வைக்க வேண்டும் என்று அவர்கள் போட்டி வைத்தார்கள். அந்தப் போட்டியின் போது என் இரு கோரைப் பற்களும் உதிர்ந்து விட்டன. நான் தோற்றதால் என் மந்திரவாதி சவுக்கால் என்னை அடிக்கலானான். நான் வலி பொறுக்காமல் ஓடி உங்களிடம் வந்து சேர்ந்தேன்'' என்றது.

அவர்கள் "சரி. எங்களை விட்டுப் போக மாட்டாயே'' என்று கேட்டதும் பூதமும் "மாட்டேன். நீங்கள் செய்த உதவிக்கு நன்றி செலுத்தும் வகையில் உங்களோடேயே இருப்பேன். எல்லா உதவிகளையும் புரிவேன்'' என்றது. அவர்களும் அது கேட்டு மகிழ்ந்து தாம் பூதத்தின் உதவியால் லட்சாதிபதிகளாகி விடலாம் என்று மனக் கோட்டை கட்டினார்கள்.

அவர்கள் வெள்ளிக் கோரைப் பற்களை பூதத்தின் வாயில் பொருத்தி அதனைக் கண்மாய்க்கு அழைத்துப் போனார்கள். அதன் உருவத்தை நீரில் பார்க்கும்படிச் சொன்னார்கள். பூதமும் தன் உருவத்தை நீரில் பார்த்து "ஆகா! எவ்வளவு அழகான கோரைப் பற்கள்! இந்த வெள்ளிப் பற்கள். முன்பு எனக்கு இருந்த பற்களைவிட அழகாக இருக்கின்றனவே'' எனக்கூறியவாறே உயர எழும்பி ஆகாய வழியாய் சென்று மாயமாய் மறைந்து விட்டது.

பொன்னனும் சின்னனும் பிரமித்துப் போனார்கள். முடிவில் அவர்கள் "தங்கப்பனின் மகன் முத்து வயதில் சிறியவனானாலும் நம்மை விட புத்திசாலிதான். பூதம் ஓடி விடும் என்றான். அப்படியே நடந்தது பார். நாம்தாம் ஏமாந்தோம். பூதத்தோடு நாம் சிறுகச் சிறுகச் சேர்த்து வைத்திருந்த பணமும் போய்விட்டதே'' என்று புலம்பியவாறே பழையபடித் தம் மரத்திற்கே போய்ச் சேர்ந்தார்கள்.





# நண்பன் தான்!

அந்நாட்டின் தலைநகரில் அலியின் கடையில்தான் அந்நகரப் பிரமுகர்கள் வந்து முகச்சவரம் செய்து கொள்வார்கள். அதற்குக் காரணம் அலி நன்றாகச் சவரம் செய்ததே.

ஒரு நாள் அலியின் வீட்டில் விறகு இல்லாது போகவே அவன் தெருவில் எட்டிப் பார்த்தான். அப்போது ஒரு விறகு வெட்டி தன் கழுதை மீது விறகுகளைப் போட்டுக் கொண்டு வந்து கொண்டிருந்தான். அலி அவனைக் கூப்பிட்டு "உன் கழுதை மீதுள்ள மரக்கட்டைகளை எல்லாம் போட்டு விடு. பத்து வெள்ளிப்பணம் கொடுக்கிறேன்" என்றான்.

விறகு வெட்டியும் அது நல்ல விலை தான் என மகிழ்ந்து கழுதை மீதுள்ள விறகுகளை எல்லாம் எடுத்துப் போட்டான். அப்போது அலி கழுதையின் சேணத்தோடு பிணைக்கப்பட்டிருந்த மரக்கட்டையையும் எடுத்துப் போடச் சொன்னான். விறகு வெட்டியோ முடியாது எனக் கூறவே அலி அவனை அடித்து சேணத்தோடு இருந்த மரக்கட்டையைப் பிடுங்கிக் கொண்டு அவனையும் அவனது கழுதையையும் விரட்டி விட்டான்.

ஏழை விறகு வெட்டி என்ன செய்வான்? அவன் உடனே ஓடிப் போய் நீதிபதியிடம் அலி செய்த அநியாயத்தைக் கூறி அவனை விசாரித்துத் தனக்குத் தீர்ப்பு அளிக்குமாறு வேண்டினான். அந்த நீதிபதி அலியிடம் முகச்சவரம் செய்து கொள்பவர். அதனால் விறகு வெட்டியின் வழக்கை ஏற்க மறுத்து விட்டார்.

விறகு வெட்டி கவலையுடன் தெருவில் சென்று கொண்டிருந்தான். அப்போது ஒரு வயதான

—அராபியப் பழங்கதை—

கிழவர் அவனைக் கண்டு "கவலைப் படாதே. இந்த நாட்டு சுல்தான் மிகவும் நல்லவர். எல்லோருக்கும் சரியான நீதி வழங்குபவர். நீ அவரிடம் போய் உன் வழக்கைக் கூறு. உனக்கு நீதி கிடைக்கும்" என்றார்.

விறகு வெட்டியும் அதைக் கேட்டு மகிழ்ந்து சுல்தானைக் காணச் சென்றான். அவரை அவனால் எளிதில் காணவும் முடிந்தது. அவன் அலி தனக்குச் செய்த அநியாயத்தைக் கூறி "நீதிபதி என் வழக்கை ஏற்க மறுத்து விட்டார்கள். ஏனெனில் அவர் அலியின் கடைக்குப் போய் முகச்சவரம் செய்து கொள்பவர். தாங்கள் தாம் இந்த வழக்கை ஏற்று விசாரித்து எனக்கு நீதி கிடைக்கச் செய்ய வேண்டும்" என்று வேண்டினான்.

சுல்தானும் சற்று யோசித்து விட்டு அவனிடம் இரகசியமாக ஏதோ கூறி "நான் சொன்னபடி செய். உனக்கு நீதி கிடைக்கும்" என்று சொல்லி அனுப்பினார்.

மறுநாள் விறகு வெட்டி அலியின் கடைக்குப் போய் "நானும் என் நண்பனும் முகச் சவரம் செய்து கொள்ள வேண்டும் என்ன கட்டணம்?" என்று கேட்டான். அலியும் "ஆளுக்கு ஒரு வெள்ளிப் பணம்" எனவே விறகு வெட்டியும் இரண்டு வெள்ளி பணங்களை எடுத்து அலியிடம் கொடுத்து "நான் முதலில் சவரம் செய்து கொள்கிறேன். என் நண்பர் வெளியே இருக்கிறார். பிறகு அவரை அழைத்து வருகிறேன்" என்றான்.

அலியும் பணத்தை வாங்கிக்



கொண்டு முதலில் விறகு வெட்டிக்கு முகச் சவரம் செய்தான். பிறகு அவனது நண்பனை அழைத்து வரும் படிச் சொல்லவே விறகு வெட்டி யும் தன் கழுதையைக் கடைக்குள் அழைத்து வரவே அலி திடுக் கிட்டு "நான் கழுதைக்கு சவரம் செய்யமாட்டேன்" என்றான். விறகு வெட்டியோ "ஒப்பந்தப்படி நீ இதற்கும் சவரம் செய்தே ஆக வேண்டும்" என்றான். தகராறு முற்றியது. வேடிக்கை பார்ப்போர் கூட்டம் கூடியது. விறகு வெட்டி அதற்கு சுல்தானிடம் தீர்ப்பு கேட் கலாம் எனவே எல்லோரும் விறகு வெட்டியையும் அலியையும் சுல் தானிடம் அழைத்து சென்றார்கள்.

சுல்தானும் விறகு வெட்டி கூறி யதைக் கேட்டு விட்டு அலியிடம் "நீ இவருக்கும் இவர் நண்பனுக் கும் முகச்சவரம் செய்ய ஒப்புக் கொண்டு பணம் வாங்கி கொண் டாயா?" என்று கேட்டார். அவ னும் "ஆம். ஒப்பந்தப்படி பணம் வாங்கிக் கொண்டேன். ஆனால் இவரது நண்பர் ஒரு கழுதை என் பது எனக்குத் தெரியாதே. ஒரு மனிதனின் நண்பன் மனிதனாகத் தானே இருப்பான் என நினைத்து விட்டேன்" என்றான்.

சுல்தானோ "நண்பன் மனிதனா கவும் இருக்கலாம் மிருகமாகவும் இருக்கலாம். ஒப்பந்தம் ஒப்பந்தமே. கழுதை மீதுள்ள மரக்கட்டை என் றால் அதன் சேணத்தில் பிணைத்த கட்டை என்பது ஒப்பந்தம் என்றால் இந்தக் கழுதையும் இவரது நண் பரே. ஒப்பந்தப்படி நீ இந்தக் கழுதைக்கும் சவரம் செய்தே ஆக வேண்டும்" என்றார்.

அலி வேறு வழி இல்லாமல் அந்த தர்பாரில் எல்லோர் முன்பும் விறகு வெட்டியின் கழுதைக்கு முகச்சவரம் செய்ய வேண்டியதா யிற்று. அவன் அவமானப்பட்டான். அதன் பிறகு அவனிடம் யாரும் சவரம் செய்து கொள்ளவில்லை.



## மிகப் பெரிய சுறுமீன்



1978 நவம்பரில் அஜோர்ஸ் கடல் பகுதியில் கிடைத்த ஒரு பெரிய சுறுமீனே (வைப் ஷார்க்) உலகில் மிகப் பெரியது எனக் கருதப்படுகிறது. 29 அடி 8 அங்குல நீளமுள்ள இந்த மீனின் எடை 4,536 கிலோ கிராம்.

1983ல் பசிபிக் மகா சமுத்திரத்தில் எழுந்த ஒரு புயல் பூமி சுழலும் வேகத்தைக் குறைத்தது. ஒரு நாளுக்கு ஒரு மில்லி நொடியில் ஐந்தில் ஒரு பங்கு வீதம் குறைந்தது. பூஉலக சூழ்நிலையில் காற்றின் வேகம் முன்னை விட எட்டரை சதம் அதிகரித்துள்ளது.



## புயல் பூமியின் சுழற்சி வேகத்தைக் குறைத்தது

## நீளமான யானைத் தந்தம்



நியூயார்க் உயிரின ஆய்வுக் கழகம் பொருட்காட்சி அமைத்ததில் மிக நீள மான யானைத் தந்தத்தை அதில் வைத் தது. இதுவரை கிடைத்த தந்தங்களில் இதுவே மிக நீள மானது. வலது தந்தம் 11 அடி. 5 1/2 அங்குலம். இடது தந் தம் 11 அடிகள்.

க்ளியரெஸில் பருக்களில் மூன்று வழிகளில் ஆற்றலுடன் செயல்புரிகிறது.



க்ளியரெஸில்தான் உலகிலேயே முதன்மையானது என்பது இதனால தெள்ளத்தெளிவாகிறது.

பருக்கள் உங்கள் வாழ்க்கைக்கு முட்டுக் கட்டையாக இருக்க விடாதீர்கள். க்ளியரெஸில் உபயோகியுங்கள்.

நண்பர் குழாம் ஏற்படுத்திக் கொள்ளும் விஞ்ஞானத்தில் ஃபர்ஸ்ட்-க்ளாஸ் மதிப்பெண் பெறுங்கள்.




பருக்களுக்கு சிகிச்சை அளிப்பதில் உலகிலேயே முதன்மையானது.

Enterprise/PG/CC/P/3/Tm a

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 மே மாத இதழில் வெளியிடப்படும்



M. Natarajan



Anant Desai

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அணைத்து வளர்ப்பதில் இன்பம்

இரண்டாவது போட்டோ : மீட்டி இசைப்பதில் இன்பம்

பரிசு பெற்றவர் : சாந்தா சத்தியமூர்த்தி, ஹைதராபாத்-44

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.


அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 36-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# Ta dum, They is here

**Oops!**
**Kiddy grammar sure is catchy—Ya, they are here.**

Bow Wow 'n' Floppy the doggies (wuff! wuff!), Jumbo the elephant, Wobbit the rabbit, Teddy 'n' Sporty your bear buddies, the mouse of your house—Squeeks, not to mention Flipper the dolphin 'n' Bunny with the Twins. They are all part of the CUDDLES family. And hang on—there's more to come.



The one thing we didn't do while making our toys was fool around. We left that entirely for your kid to do. Come, check us out.

What stuffing to use, what shape to give, which colour to use...... We've spent long months in designing and crafting the toys which can take on the toughest torture test ever—childhandling. To ensure that they're safe.

**CUDDLES**

CHANDAMAMA TOYTRONIX
In collaboration with Sammo Corporation, S. Korea

Chandamama Buildings, 188, NSK Salai,
Vadapalani, Madras-600 026

# MORE THAN A MANGO!

nutrine
Naturo
MANGO FRUIT BAR

NATURO FROM NUTRINE. A THICK JUICY MANGO BAR.
MADE FROM PURE MANGO PULP.
SWEETER AND SO MUCH MORE THAN JUST A MANGO.




Mudra:Bir:NN:310:90